ஓம் அகத்தீசாய நம



மகான் மெய்கண்டதேவர் அருளிய

# சிவஞானபோதம்

விளக்க உரை

சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு,
தவத்திரு **ரெங்கராஜ தேசிக சுவாமிகள்**





மகான் மெய்கண்டதேவர்

ஓம் சரவணபவ

ஓம் அகத்தியர் துணை

ஓம் மெய்கண்டதேவர் திருவடிகள் போற்றி






அன்பளிப்பு:
தஞ்சாவூர்
நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T

மகான் மெய்கண்டதேவர் அருளிய

# சிவஞானபோதம்

## விளக்கவுரை

(ஞானத்திருவடி தொடரின் தொகுப்பு)


அருளியது :

சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு

தவத்திரு

**ரெங்கராஜ தேசிக சுவாமிகள்**

நிறுவனர்,

ஸ்ரீ அகத்தியர் சன்மார்க்க சங்கம்,

ஓங்காரக்குடில், துறையூர் – 621010,

திருச்சி மாவட்டம். போன் : 04327 255184.

# நூல் குறிப்பு


நூல் - சிவஞானபோதம் - விளக்க உரை

ஆசிரியர் - சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு தவத்திரு ரெங்கராஜ தேசிக சுவாமிகள்

தாள் - 70 ஜி.எஸ்.எம்.

பக்கங்கள் - 52 பக்கங்கள்

படிகள் - 1000

விலை - உருபா 30

வெளியீட்டு நாள் - 24.05.2013

வெளியீடு - ஸ்ரீ அகத்தியர் சன்மார்க்க சங்கம்,
ஓங்காரக்குடில்,
115, நகர் விரிவாக்கம்,
துறையூர் - 621 010.
திருச்சி மாவட்டம்.
தொ.பே. எண் - 04327 255184
www.agathiar.org

அச்சிட்டோர் - வாஞ்சி மறுதோன்றி அச்சகம்,
துறையூர். ✆ 243638.

# அருள்திரு மெய்கண்டார் வரலாறு

தேவாரம் பாடிய மூவருள் முதலாவதாக வருபவர் திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் ஆவர். அந்த இருவரின் பாடல் பெற்ற சிவத்தலங்களுள் ஒன்று திருப்பெண்ணாகடம். இது தமிழ்நாட்டில் நடுநாட்டுத் தலம். தற்போது பெண்ணாடம் என்று அழைக்கப்படுவது இத்தலமே.

இவ்வூரில் 777 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்துவந்த சைவ வேளாளர் குடியில் அச்சுதர் களப்பாளர் (அச்சுதகளப்பாளர் எனவும் சொல்லப்படும்) என்ற ஒரு பெரியவர் இருந்தார். அவர் நீண்ட காலமாக குழந்தை இல்லாமையால் மிகவும் வருந்தினார். அவருடைய குலகுரு அருணந்தி சிவாச்சாரியார். அச்சுதர் களப்பாளரின் வருத்தம் அறிந்த ஆசிரியர் ஒரு நாள் தேவார ஏட்டில் கயிறு சார்த்திப் பார்த்தார். திருவருளால் அங்குக் கண்ட திருப்பாடல் சம்பந்தப் பெருமான் பாடிய தேவாரப் பாடல்.

பேய்அடையா, பிரிவுஎய்தும்;
  பிள்ளையினோடு உள்ளம்நினை
வாயினவே வரம்பெறுவர். ஐயுற
  வேண்டாஒன்றும்
வேய்அனதோள் உமைபங்கன்
  வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம்மைத்
  தோயாவாம் தீவினையே.

என்பது அப்பாடல்.

இத்திருப்பாடலைக் கண்டு அளவிலா மகிழ்ச்சி கொண்டார் அருணந்தி சிவம். இத்திருப்பாடலில் சொல்லியவாறே அச்சுதர் களப்பாளரைத் திருவெண்காடு சென்று முக்குளம் நீராடிச் சிவபெருமானை வழிபடக் கட்டளையிட்டார். ஆசிரியர் ஆணையின் படியே மாணவரும் மனைவியோடும் திருவெண்காடு சென்றார். முக்குளம் நீராடிப் பெருமானை வழிபட்டுத் தவம் இருந்தார்.

சில நாளில் சிவபெருமான் திருவருளால் சிறந்ததோர் ஆண் குழந்தையைப் பெற்றார். அக்குழந்தைக்குப் சுவேதனப் (வெண்காட்டுப்) பெருமாள் என்று திருப்பெயர் சூட்டி மகிழ்ந்தனர். அக்குழந்தை பெண்ணாகடத்தில் உள்ள தந்தையார் இல்லத்திலும், திருவெண்ணெய் நல்லூரில் இருந்த தாய்மாமனார் இல்லத்திலுமாக வளர்ந்து வந்தது.

குழந்தைக்கு மூன்றாவது ஆண்டு. அப்பொழுது, திருவெண்ணெய் நல்லூரில் இருந்து வந்த ஒருநாள்.

திருக்கயிலாய பரம்பரையில் அகச் சந்தான ஆசிரியருள் ஒருவராகிய பரஞ்சோதி முனிவர் வானத்தின் வழியே வந்து கொண்டிருந்தார். வெண்ணெய்நல்லூர் பகுதியில் வந்தபோது அங்கு வீதியில் விளையாடிக் கொண்டிருந்த வெண்காட்டுப் பெருமாளாகிய குழந்தையைக் கண்டார். குழந்தையின் பரிபக்குவம் அறிந்தார். வழிமுறையில் தாம் பெற்ற சிவஞானத்தை அவர்க்கு உபதேசித்துவிட்டுச் சென்றார்.

சிவஞானம் பெற்ற சிறுவராகிய வெண்காட்டுப் பெருமாள் அப்போதே மெய்யுணர்வு உடையவர் ஆனார். மெய்யுணர்வாகிய சிவஞானக் கண்ணால் மெய்ப்பொருளைக் கண்டு உணர்ந்த பிள்ளை அன்று முதல் மெய்கண்டார் ஆயினார்.

தாம் கண்டுணர்ந்த மெய்யினை உலகத்தவர் பலரும் கண்டு இன்புற வேண்டுமென விரும்பினார். அதுவரை உபதேச முறையில் மட்டும்வந்த சிவஞான போதத்தை அனைவரும் அறியச் செந்தமிழ் நூல் வடிவில் உருவாக்கி வழங்கினார்.

பன்னிரண்டு சூத்திரங்களில் மெய்கண்டார் அருளி வழங்கிய தமிழ்ச் சிவஞான போதமே இன்று சித்தாந்தச் சைவத்திற்கு முதன்மையான ஒரு முழுநூலாகப் போற்றப்பட்டு வருகிறது.

சிவஞானபோதம் அருளிய மெய்கண்ட தேவர்பால் அணுகிச் சிவஞானம் கைவரப் பெற்ற மாணாக்கர் பலர். அவருள் தலை மாணாக்கர் ஆனவர் குலகுருவாக விளங்கிய அருணந்திசிவம் என்றால் மெய்கண்டார் பெருமையை யாரே அளவிட்டு கூறவல்லவர்!

இவ்வாறு சைவ உலகம் வாழ வழிசெய்த மெய்கண்டதேவர் சிறந்த சிவானுபவச் செல்வராக விளங்கி ஒரு ஐப்பசி மாதத்து சுவாதி நன்னாளில் என்றும் இடையறாச் சிவப்பேரின்பத்தில் திளைத்தருளினார்.

திருச்சிற்றம்பலம்

– நன்றி திருவாவடுதுறை ஆதீனம்.



# உள்ளடக்கம்

# மகான் மெய்கண்டதேவர் அருளிய சிவஞான போதத்திற்கு

## குருநாதர், சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு தவத்திரு **ரெங்கராஜ தேசிக சுவாமிகள்** அருளுரை

மகான் மெய்கண்ட தேவர் திருவடியை பூஜித்து அவரால் எழுதப்பட்ட சிவஞான போதத்திற்கு விளக்கம் எழுதுகிறோம். அவர் ஆசி இல்லாமல் இதற்கு விளக்கம் எழுத முடியாது. அவரே அகமும் புறமும் இருந்து உணர்த்த வேண்டுமென்று வேண்டி எழுதப்படுகிறது.

சிவஞானபோதம் என்பது சிவத்தை அறியும் அறிவு (ஞானம்).

மகான் மெய்கண்ட தேவர் மெய்யையும், பொய்யையும் நன்கு உணர்ந்தவராவார். நமது உடம்பில் பொய்யும், மெய்யும் கலந்து உள்ளது. பொய்யாகிய தூலதேகமும் அதாவது புறஉடம்பு, மெய்யாகிய அகஉடம்பு அதாவது சூட்சும தேகம். மும்மல குற்றமுடைய தூலதேகம் மாசு நீங்கினால் அகஉடம்பாகிய சூட்சும தேகம் வெளிப்படும். அதாவது ஒளிஉடம்பு தோன்றும். இதுவே இரகசியம், சூத்திரம் எனப்படும். மகான் மெய்கண்ட தேவர் பன்னீராயிரம் பாடல்களை பன்னிரெண்டு சூத்திரங்களாக சுருக்கி பாடியுள்ளார். முதலில்

சூத்திரம் என்பது சூட்சுமம் அல்லது இரகசியம் எனப்படும்.

மகான் மெய்கண்ட தேவர் அருளிய 12 சூத்திரங்களும் மகான் மெய்கண்ட தேவரால் உணர்த்தக்கூடிய ஒன்றாகும். இதை விவரித்து எழுத முடியாது. அவரவர்கள் உணரக்கூடிய ஒன்றாகும்.

நீற்றைப் புனைந்தென்ன நீராடப்போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை மாமறைநூல்
ஏற்றிக் கிடக்கும் எழுகோடி மந்திர மென்ன கண்டாய்
ஆற்றிற் கிடந்தும் துறையறியாமல் அலைகி ன்றையே.

– மகான் பட்டினத்தார்.

எல்லா நூல்களும், கோடானுகோடி சாத்திரங்களும் ஞானத்தைப் பற்றிச்சொன்னாலும் நம்மால் அறிய முடியாது. குருநாதர் ஆசியால்தான் சாஸ்திரங்களில் உள்ள கருத்தை அறிந்து ஜென்மத்தை கடைத்தேற்ற முடியும்.

அவிழ்க்கின்ற வாறும் அதுகட்டு மாறும்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறும்
தமிழ்ச்சொல் வடசொல் எனும்இவ் விரண்டும்
உணர்த்தும் அவனை உணரலு மாமே.
– திருமந்திரம் – ஆகமச்சிறப்பு – கவி எண் 66.

முருகன் தனிவேல் முநிநம் குருவென்
றருள்கொண் டறியார் அறியுந் தரமோ
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே.
– கந்தரநுபூதி 13.

“முருகன் தனிவேல் முநிநம் குருவென்று
அருள் கொண்டு அறியார் அறியும் தரமோ
உருஅன்று அருஅன்று உளதன்று இலதன்று
இருளன்று ஒளியன்று என நின்றதுவே”

நீலச் சிகண்டி யிலேறும் பிரானெந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன
**சீலத்தை** மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப் பார்மரிப் பார்வெறுங் கர்மிகளே.
– கந்தரலங்காரம் 26.

“குருநாதன் சொன்ன சீலம்” என்பது சும்மா இரு என்ற சொல்லாகும். இந்த சொல்லின் இரகசியத்தை அறிந்தவர்கள் காலனை வென்ற சிவயோகிகளாகும்.

சிவனை வழிபட்டார் எண்ணிலாத் தேவர்
அவனை வழிபட்டங் காமாறொன் றில்லை
அவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபடிற் கூடலு மாமே.
– திருமந்திரம் 2119.

குருநாதன் அருளால் இறைவனை அடையலாம்.

“எல்லாம் செயல்கூடும் என்ஆணை அம்பலத்தே
எல்லாம்வல் லான்தனையே ஏத்து.”
– அருட்பிரகாச வள்ளலார் இராமலிங்க சுவாமிகள்.

"ஒருமொழியே பலமொழிக்கு மிடங்கொடுக்கும்; அந்த
வொருமொழியே மலமொழிக்கு மொழிக்கும்" எனமொழிந்த
குருமொழியே மலையிலக்கு; மற்றைமொழி யெல்லாம்
கோடின்றி வட்டாடல் கொள்வதொக்குங் கண்டாய்!
கருமொழியிங் குனக்கில்லை; மொழிக்குமொழி ருசிக்கக்
கரும்பனைய சொற்கொடுனைக் காட்டவுங் கண்டனை; மேல்
தருமொழியிங் குனக்கில்லை; உன்னைவிட்டு நீங்காத்
தற்பரமா யானந்தப் பொற்பொதுவாய் நில்லே!
– தாயுமானசுவாமி பாடல்கள் – 17. நினைவு ஒன்று – 9.

ஒரு மொழியே என்பது சும்மா இரு என்ற சொல்லாகும்.

## மங்கல வாழ்த்து

கல்லால் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.

இதன் பொருள் : கல்லால் நிழல் – அருள்வடிவாகிய கல்லால் நிழலின்கண்ணே எழுந்தருளி இருந்து, மலைவு இல்லார் – நந்திபெருமானுக்கு இந்நூலான் மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர், அருளிய – மேன்மேற் கருணை கூர்ந்து அருளுதற்பொருட்டு, பொல்லார் இணைமலர் – பொல்லாத பிள்ளையாருடைய ஞானசத்தி, கிரியாசத்தி என்னும் இரண்டு திருவடித் தாமரைகளை, நல்லார் – கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர், புனைவரே – தம்முடைய ஞானசத்தி, கிரியாசத்திகட்கு வியாபகமாகக் கொண்டு தாடலைபோல் அடங்கி நிற்பர்.

–நன்றி – காசி திருமடம், திருப்பனந்தாள்.

## அவையடக்கம்

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்
எம்மை யுடைமை எமையிகழார் – தம்மை
உணரார் உணரார் உடங்குஇயைந்து தம்மில்
புணராமை கேளாம் புறன்.

இஃது அவையடக்கம் கூறுமுகத்தானே ஈண்டு எடுத்துக்கொண்ட சித்தாந்த சைவத்தின் உயர்வும் ஏனைச் சமயத்தார்களது இழிபும் கூறுகின்றது.

இதன் பொருள் : தம்மை உணர்ந்து தமை உடைய தன் உணர்வார் – உடைப்பொருளாகிய தம் இயல்பினை உணர்ந்து தம்மை உடையானாகிய தலைவனை உணரும் சித்தாந்த சைவர், எம்மை உடைமை எமை இகழார் – தமக்கு உடைப்பொருளாகிய எம்மை உடையர். ஆகலின், எம்மைக் குற்றங்கள் நீக்கிக் குணம் கொண்டு கோதாட்டுவது அன்றி இகழ்தல் செய்யார்; (ஆகலான் எம்மாற் செய்யப்படும் நூலையும் அவ்வாறு கைக்கொள்வர்) தம்மை உணரார் உணரார் – அங்ஙனம் தம்மை உணராதார் தம்மை உடையானாகிய தலைவனையும் உணரார். ஆகலான், உடங்கு இயைந்து தம்மின் புணராமை – அவர் ஒருங்கே குழீஇக்கொண்டு தம்மில் தாமே சேராது முரணுதலால், புறன் கேளாம் – அவர் எம்மையும் எம்மாற் செய்யப்படும் நூலையும் இகழ்ந்துரைக்கும் மொழியை யாம் பொருளாகக் கொள்ளாம்.

–நன்றி – காசி திருமடம், திருப்பனந்தாள்.

எவர் ஒருவர் தன்னைப்பற்றி அறிகின்றாரோ அவரே தலைவனைப்பற்றி அறிவார். அவர்களே ஞானிகள். தலைவனைப் பற்றி அறிந்தவரே உண்மையையும் பொய்யையும் அதாவது சத்தையும் அசத்தையும் பற்றி அறிந்த மெய்கண்ட தேவனாகிய என்னைப் பற்றி அறிய முடியும். உண்மைப்பொருள் அறியாதவர்கள் என்னைப் பற்றியும் இச்சிவஞானபோதத்தைப் பற்றியும் அறிய முடியாது. அப்படிப்பட்டவர்கள் இந்நூலைப்பற்றியும், என்னைப்பற்றியும் குறை கூறினால், அதை நான் ஒரு பொருட்டாக மதிக்க மாட்டேன் எனக் கூறுகிறார் மகான் மெய்கண்டதேவர்.

அவிழ்க்கின்ற வாறும் அதுகட்டு மாறும்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறும்
தமிழ்ச்சொல் வடசொல் எனும்இவ் விரண்டும்
உணர்த்தும் அவனை உணரலு மாமே.

– திருமந்திரம் – ஆகமச்சிறப்பு – கவி எண் **66.**

அண்டங்கள் ஒருகோடி ஆயினுங் குலகிரி
அநந்தமா யினுமேவினால்
அடையவுரு விப்புறம் போவதல் லதுதங்கல்
அறியாது சூரனுடலைக்

கண்டம் படப்பொருது காலனுங் குலைவுறுங்
கடிய கொலை புரியு மதுசெங்
கநகா சலத்தைக் கடைந்துமுனை யிட்டுக்
கடுக்கின்ற துங்க நெடுவேல்

தண்டந் தநுத்திகிரி சங்குகட் கங்கொண்ட
தானவாந் தகன்மா யவன்
தழல்விழிக் கொடுவரிப் பருவுடற் பஃறலைத்
தமனியச் சுடிகையின்மேல்

வண்டென்று கமலத்து மங்கையுங் கடல்ஆடை
மங்கையும் பதம் வருடவே
மதுமலர்க் கண்துயில் முகுந்தன்மரு கன்குகன்
வாகைத் திருக்கை வேலே.

– வேல்விருத்தம் – கவி எண் 7.

மேயினை மெய்ப்பொருள் விளங்கினைநீ அது
ஆயினை என்று அருள் அருட்பெருஞ்ஜோதி

– அருட்பெருஞ்ஜோதி அகவல்.

இங்கு அது என்ற வார்த்தையை மகான் மெய்கண்ட தேவர் பயன்படுத்தியது போன்றே மகான் திருமூலர், மகான் அருணகிரிநாதர் ஆகியோரும் மற்றும் பலரும் பயன்படுத்துகின்றனர். மேலோட்டமாக பார்த்தால் இதன் பொருள் புரியாது. ஞானிகள் சத்தையே "அது" என குறிப்பிடுவார்கள். இது ஞானிகள் பரிபாஷையாகும். அதை அறிய எண்ணாலும் எழுத்தாலும் முடியாது, தானே அறியவும் முடியாது. அது ஞானிகளால் உணர்த்தக் கூடிய பொருளாகும். அதுவே சிவமாகவும் உள்ளதை அவர்களால்தான் உணர முடியும்.

# முதல் சூத்திரம்

**அவன்அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்**
**தோற்றிய திதியே ஒடுங்கிமலத்து உளதாம்**
**அந்தம் ஆதி என்மனார் புலவர்.**

– சிவஞானபோதம் – முதல் சூத்திரம்.

ஆதியும் அந்தமுமாக இருக்கக்கூடிய இறைவன் உயிரினங்களை படைக்கும்போது உன்னதமான பிறவியாகிய மனிதப்பிறவியையும் படைத்தான். அவன் என்று சொல்லப்பட்ட ஆண்பாலாகவும், அவள் என்று சொல்லப்பட்ட பெண்பாலாகவும், அது என்பது எல்லா உயிர்களையும் தோற்றுவித்த இயற்கையே நாமாகவும், நாமே இயற்கையாகவும் என்று பொருள்படும். அதே இறைவன் மனிதனை படைக்கும்பொழுது மூன்று வினைகளையும் சேர்த்து படைத்துள்ளான்.

அம்மூன்று வினைகளாவன இப்பிறப்பு, மறுபிறப்பு, இனிபிறவாமை ஆகிய மூன்றாகும். எல்லாம்வல்ல இறைவன் மனிதனை

தோற்றுவிக்கும்போதே மும்மலத்தினுள் ஒடுங்குகின்றான். என்று ஒருவன் தன்னையும் தலைவனையும் அறிகின்றானோ அவனே மும்மலக் குற்றத்தை அறிந்து நீக்கிக் கொள்வான். மும்மலக்குற்றம் நீங்கினால் மீண்டும் பிறவி இல்லை. நெல்லிற்கு உமி நீங்கினால் அரிசி முளையாது. அதுபோல தூலதேகம் நீங்கினால் மீண்டும் பிறவி இல்லை. மகான் மெய்கண்ட தேவர் ஆசி பெற்றால் முதலில் தன்னைப்பற்றி அறியவும், பின்பு தலைவனைப்பற்றி அறியவும் உணர்த்துவார். இதற்கு குருஅருளே முதற்காரணமாகும். குருஅருள் இல்லையென்றால் அணுவளவும் அறிந்து கொள்ள முடியாது. இதை அறிவுடையவர்களே அறிந்து கொள்வார்கள்.

“என்னவென்று சொல்லுவே னிலக்கண மிலாததைப்
பன்னுகின்ற செந்தமிழ்ப் பதங்கடந்த பண்பென
மின்னகத்தில் மின்னொடுங்கி மின்னதான வாறுபோல்
என்னகத்து ளீசனும் யானுமல்ல தில்லையே.”

– மகான் சிவவாக்கியர் – கிரியை – பாடல் எண் 94.

எல்லாம்வல்ல இறைவன் இத்தன்மையன், இன்ன வடிவினனென்று சொல்ல முடியாதவனாவான். அவன் இலக்கணத்திற்கு உட்படாதவனாவான். மின்னல் தோன்றும்போதே அவ்வொளி உடனே அம்மின்னல் ஒளியிலேயே ஒடுங்கிவிடும். அதுபோல் இறைவன் மனிதனைப் படைக்கும்போதே மும்மலத்தினுள் ஒடுங்கி விடுவான்.

ஆசான் மெய்கண்ட தேவர் ஆசி இருந்தால் மும்மலக்குற்றம் அற்றுவிடும். மும்மலக்குற்றம் அற்றால் சூட்சுமதேகமாகிய ஒளிஉடம்பு வெளிப்படும். இதை அறிந்தவர்கள்தான் புலவர்கள். அதாவது அறிவுடையவர்கள் ஆவார்கள்.

இவ்வொளி உடம்பைப் பெற்றவர்கள் என்றும் மரணமில்லா பெருவாழ்வு பெற்று வாழ்வார்கள். இவர்களே ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் எனும் ஐந்தொழில் செய்யும் வல்லவராவார். இவர்களது திருவடியைப் பூசித்து ஆசிபெறுவதே சிறப்பறிவாகும்.

சிருஷ்டி, திதி, சம்ஹாரம் என்பது படைத்தல், காத்தல், அழித்தல் என பொருள்படும். காத்தல் பொருள்தான் திதி என்று சொல்லப்படுகிறது.



# இரண்டாம் சூத்திரம்

**அவையே தானே யாயிரு வினையிற்**
**போக்கு வரவு புரிய வாணையின்**
**நீக்க மின்றி நிற்கு மன்றே.**

– சிவஞானபோதம் – இரண்டாம் சூத்திரம்.

எல்லாம்வல்ல இறைவனே நாமாகவும், நல்வினை, தீவினை காரணமாக பிறக்கவும், இறக்கவும் காரணமாய் உள்ளது. இது எல்லாம்வல்ல இறைவனின் கட்டளைப்படி தொடர்ந்து நிகழ்ந்து வரும் செயலாகும். ஆசான் மகான் மெய்கண்ட தேவர் ஆசி இருந்தால் நல்வினைப்பற்றியும், தீவினைப்பற்றியும் அறிந்து இருவினையும் அற்றுவிட்டால் அவனுக்கு மீண்டும் பிறவி இல்லை. பிறவியற்ற தன்மையும் மூன்றாவது செயலாகும்.

எ.கா –

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

– திருக்குறள் 5.

இருள் என்பது மும்மலக்குற்றமாகும். மும்மலக்குற்றமாகிய இருள் நீங்கிவிட்டால் இருவினையும் அற்றுவிடும். அவருக்கு இனி மீண்டும் பிறவி இல்லை. எல்லாம்வல்ல இறைவனின் செயல்பாட்டை அறிந்து விடாமுயற்சி மேற்கொண்டு செயல்படுதல் வேண்டும். செயல்பட்டால்தான் இருளாகிய அறியாமை நீங்கும். இதற்கு குருஅருள் வேண்டும். நமது கல்வி துணைக்கொண்டு முயற்சித்தால் காணாமல்போன பொருளை இருட்டில் தேட முயற்சிப்பது போல் ஆகும்.

குறிப்பு: உடம்பு பொய்யும் மெய்யும் கலந்துள்ளது. பொய்யை அறிந்து நீக்கினால் மெய்யாகிய சூட்சுமதேகம் வெளிப்படும். அதுவே ஒளி உடம்பாகும். அத்தகு மெய்யை அறிந்ததினால் மெய்கண்ட தேவர் எனப்பெயர் பெற்றார்.

சிவஞானபோதம் என்பது சிவத்தை அறியும் அறிவு (ஞானம்).



# மூன்றாம் சூத்திரம்

**உளதில தென்றலின் எனதுட லென்றலின்**
**ஐம்புல னொடுக்க மறிதலின் கண்படில்**
**உண்டிவினை யின்மையின் உணர்த்த வுணர்தலின்**
**மாயா வியந்திர தனுவினு ளான்மா.**

– சிவஞானபோதம் – மூன்றாம் சூத்திரம்.

மகான் மெய்கண்ட தேவரிடம் அவர்களது சீடர்கள் கடவுள் உண்டா இல்லையா என்றும் அதைப்பற்றி கூறுமாறு பணிந்து கேட்டபோது மகான் மெய்கண்ட தேவர் கருணை கொண்டு சீடர்களுக்கு உபதேசித்தார்.

கடவுள் உண்டு என்று கூறினார். அங்ஙனம் கடவுள் உண்டெனில் எங்கிருக்கிறார் என சீடர்கள் கேட்க அக்கடவுள் நமது உடலில்தான் உள்ளார் என கூறுகிறார். அங்ஙனம் நமது உடலில் உள்ள கடவுளை அறிய வேண்டின் ஐம்புலன் ஒடுக்கம் வேண்டும். அதாவது பொறிபுலன்கள் வழியே மனம் செல்லாது ஐம்புலன்களையும் வென்று எவர் ஒடுக்குகின்றாரோ அவர்கள்தான் தனது உடலில்உள்ள கடவுளை அறியமுடியும். நல்வினை, தீவினை உண்டா என சீடர்கள் மீண்டும் கேட்க மகான் மெய்கண்ட தேவரும் அதை சீடர்களுக்கு குருமுகாந்திரமாக நல்வினை தீவினை உண்டென்று உணர்த்துகிறார்.

உடம்பும் உயிரும் சேர்ந்து செய்யக்கூடிய பாவங்களும், புண்ணியங்களும் உயிரோடு சேரும் எனவும் கூறுகிறார். வினையை அனுபவிப்பது உடம்பா உயிரா எனக் கேட்கும்போது உடம்பும் உயிரும் சேர்ந்திருக்கும்போது செய்யப்படும் பாவங்களும், புண்ணியங்களும் உயிர் உடலை விட்டு நீங்கிய பின் உயிரைத் தொடரும். ஆனால் உடலற்ற நிலையில் உயிர் பாவபுண்ணியத்தை அனுபவிக்காது. அந்த ஆன்மா தான் உடல்வழி செய்த பாவபுண்ணியங்களுக்கு ஏற்ப பிறிதொரு தேகத்தை தாங்கும்போது முன்செய்த நல்வினை தீவினைகளை அனுபவிக்கும். ஆதலால் தனி ஆன்மா பாவபுண்ணியங்களை அனுபவிக்காது, தனி உடலும் பாவபுண்ணியங்களை அனுபவிக்காது. ஏனெனில் உடலைவிட்டு உயிர் பிரிந்தால் அது உயிரற்ற பிணமாகிவிடும். இறந்த உடல் இன்பதுன்பத்தை அறியாது. அதுபோல ஆன்மா உடலற்ற நிலையில் செயல்படாது.

ஆதலால் அதுவும் இன்பதுன்பத்தை அறியாது. எனவே உடலும் உயிரும் சேர்ந்தால் தான் இன்பதுன்பத்தை அறியவும், செயல்படவும் முடியும். எனவே இதன் மூலம் உடம்பு என்றும் அழியக்கூடியது என்றும், ஆன்மா என்றும் அழிவில்லாதது என்றும் சீடர்களுக்கு மகான் மெய்கண்ட தேவர் உணர்த்துகிறார். மும்மலக் குற்றத்தாலான இந்த தேகத்தில் ஆன்மா சிறைப்பட்டுள்ளது. மும்மலக் குற்றமாகிய மாசு நீங்கினால் ஆன்மஜோதி

தோன்றும். இதுவே மோட்சமாகும் அல்லது வீடுபேறாகும். இவை அனைத்தும் நமது உடம்பில் தான் தலைவன் உள்ளான் என்றும், நல்வினை தீவினை உண்டென்றும், நல்வினை தீவினை அனுபவிப்பது உடம்பா உயிரா என பார்க்கில் உடம்பும் உயிரும் சேர்ந்துதான் நல்வினை தீவினை அனுபவிக்கிறதென்றும், ஆசான் உணர்த்தினாலன்றி உணரமுடியாது என்பதை தெளிவாக உணர்த்துகிறது.

இதையே திருமூலரும்

இறையடி தாழ்ந்தை வணக்கமும் எய்திக்
குறையது கூறிக் குணங்கொண்டு போற்றச்
சிறையுடல் நீயறக் காட்டிச் சிவத்தோ
டறிவுக் கறிவிப்போன் சன்மார்க்கி யாமே.

– திருமந்திரம் – பக்குவன் – கவிஎண் 1701.

இடுதலைச் சற்றுங் கருதேனைப் போதமி லேனையன்பாற்
கெடுதலி லாத்தொண் டரிற்கூட் டியவா கிரௌஞ்ச வெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன் பிறவி யறவிச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினைவிலங்கே.

– மகான் அருணகிரிநாதர் – கந்தர்அலங்காரம் – 100.

பிறப்புஎன்னும் பேதைமை நீங்கச் சிறப்புஎன்னும்
செம்பொருள் காண்பது அறிவு.

– திருக்குறள் – மெய்உணர்தல் – கவிஎண் 358.

பேதைமை என்பது அறியாமையாகும். இது மும்மலக் குற்றத்தால் வந்ததாகும். மும்மலக் குற்றம் நீங்கினால் பேதைமையாகிய அறியாமை நீங்கிவிடும். செம்பொருள் என்று சொல்லாமல் சிறப்பெனும் செம்பொருள் என சொல்கிறார் வள்ளுவர். சிறப்பெனும் செம்பொருள் கண்டவர்கள் மும்மலக் குற்றத்தை நீக்கி பிறவா மார்க்கத்தை அடைவார்கள்.

தனு – உடம்பு



# நான்காம் சூத்திரம்

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

– சிவஞானபோதம் – நான்காம் சூத்திரம்.

"அந்தக் கரணம் அவற்றின் ஒன்றுஅன்றுஅவை
சந்தித்தது ஆன்மாச் சகசமலத்து உணராது
அமைச்சு அரசு ஏய்ப்பநின்று அஞ்சவத் தைத்தே."

பூசிக்க வொட்டாது மனந்தானப்பா
போதங்கள் மீதேறிச் செல்லொட்டாது
பூசிக்கவொட்டாது அஞ்சிலொன்று
புகழான பூரணத்தை நாடொட்டாது
காசிக்குப் போனாலுந் தீர்க்கொட்டாது
கர்மவினை தன்னைவிட்டுப் போமோமைந்தா
தேசிகன்றன் திருவருளை நாடொட்டாது
செப்பரிய ரெண்டெழுத்தின் சோதிதானே.

– தெட்சிணாமூர்த்தி ஞானம் 10ல் கவிஎண் 1.

வேதா கமசித்ர வேலா யுதன்வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்த மரணாக அல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே யொளித்து**சும்மா விருக்கப்**
போதா யினிமன மே!தெரி யாதொரு பூதர்க்குமே.

– கந்தரலங்காரம் – கவிஎண் 17.

செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
**சும்மாஇரு சொல்லற** என்றலுமே
அம்மாபொருள் ஒன்றும் அறிந்திலனே.

– கந்தரநுபூதி 12.

சும்மா விருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மா லறிதற் கெளிதோ? பராபரமே!

– தாயுமானவர் – பராபரக்கண்ணி 70.

சும்மா இரு என்ற சொல்லையும் மோனநிலை என்ற சமாதியையும் அறிந்தவர்கள்தான் சிவஞான போதத்தைப் பற்றி அறியமுடியும்; அறிந்து

உணரக்கூடிய ஒன்றே தவிர அதனை விவரிக்க இயலாது. சிவஞானபோதம் என்பது சிவனைப்பற்றி அறிகின்ற அறிவாகும்(ஞானம்). போதம் என்பது அறிவு அல்லது ஞானம் எனப் பொருள்படும்.

மகான் மெய்கண்ட தேவர், மகான் சிவஞான சித்தியார், மகான் அகத்தியர், மகான் திருமூலர், மகான் புலத்தீசர், மகான் போகர், மகான் காலாங்கிநாதர், மகான் திருஞானசம்மந்தர், மகான் திருநாவுக்கரசர், மகான் மாணிக்கவாசகர், மகான் சுந்தரமூர்த்தி நாயனார் போன்ற முற்றுபெற்ற ஞானிகளின் திருவடியைப் பற்றி பூஜித்து ஆசி பெறுபவர்களுக்கு மட்டும் சிவனைப் பற்றியும், சிவனை அடையும் மார்க்கத்தைப் பற்றியும் அறியமுடியும்.

குருவின் அடிபணிந்து கூடுவது அல்லார்க்கு
அருவமாய் நிற்குஞ் சிவம்.

– ஔவைக்குறள்.

குருநாதன் திருவடியைப் பற்றி பூசித்தால்தான் சிவனை அறியமுடியும். இல்லையெனில் சிவம் புலப்படாமல் போய்விடும்.

## சிவஞானபோதம் நான்காம் சூத்திரத்தின் சாரம் :-

அந்தக்கரணம் என்பது மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என நான்காகும். ஆன்மா அந்த கரணங்களைப் பற்றியும், மற்றக் கருவிகளைப் பற்றியும் அதாவது தத்துவம் 96ஐப் பற்றியும் அறிய முடியாது. சிறப்பறிவுள்ள அமைச்சரின் ஆலோசனைப்படி மன்னன் செயல்படுவதுபோல் ஆசான் மெய்கண்டதேவர் நம் அறிவோடு சார்ந்திருந்து, அறிவோடு பொருந்தி நின்று, மனம், புத்தி, அகங்காரம், சித்தம் பற்றியும், உடலில் உள்ள கருவிகளைப் பற்றியும் உணர்த்த வேண்டும். உடல்மாசு பற்றியும், உடல் மாசின் காரணமாக வந்த உயிர்மாசு பற்றியும், உயிர் மாசால் அறிவு மாசடைந்தது பற்றியும் உணர்த்தப்பட வேண்டும்.

இந்த உடம்பு சகசமலத்தால் ஆனது. தினமும் நாம் உண்ணும் அறுசுவை உணவால் இந்த தேகம் சகசமல தேகம் ஆயிற்று. மலக்குற்றம் இருக்கும் வரையில் உண்மைப் பொருள் அறிய முடியாது. ஆசான் உடம்பில் சார்ந்திருந்து மும்மலக் குற்றமாகிய களிம்பை அறுத்தால் தூல தேகத்திலுள்ள மாசு நீங்கும். தூலதேக மாசு நீங்கினால் சூட்சுமதேகமாகிய ஒளிஉடம்பை அறிய முடியும். தூலதேகமாகிய மாசு உடம்பால், உயிரை அறிய முடியாது. சூட்சும தேகம் ஆக்கம் பெறும்போது உடம்பைப் பற்றியும், உயிரைப் பற்றியும் அறிய முடியும். உடம்பைப் பற்றியும், உயிரைப் பற்றியும்

அறிகின்றவர்கள்தான் தன்னைப்பற்றி அறிவார்கள். தன்னைப்பற்றி அறிந்தவர்கள்தான் தலைவனைப்பற்றி அறிவார்கள். இவர்களே மும்மலக் களிம்பற்ற ஞானிகள் ஆவார்கள்.

"களிம்பறுத் தான்எங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத் தான்அருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவளம் பதித்தான் பதியே."

– திருமந்திரம் 114.

"மட்டகன்ற நெடுங்காலம் மனத்தால் வாக்கால்
மதித்திடினும் புலம்பிடினும் வாரா தென்றே
கட்டகன்ற மெய்யறிவோர் கரணம் நீக்கிக்
கலையகற்றிக் கருவியெலாம் கழற்றி மாயை
விட்டகன்று கருமமல போதம் யாவும்
விடுத்தொழித்துச் சகசமல வீக்கம் நீக்கிச்
சுட்டகன்று நிற்கஅவர் தம்மை முற்றும்
சூழ்ந்துகலந் திடுஞ்சிவமே துரியத் தேவே."

– திருஅருட்பா – மகாதேவமாலை – 168.

சகசமலவீக்கம் என்பது அறுசுவை உணவால் உடம்பு பெருத்தலை குறிக்கும். மலத்தாலான களிம்பை அறுக்கும் வரையில் தலைவனைப் பற்றியும், தன்னைப் பற்றியும் அறிய முடியாது. இடகலையும், பிங்கலையும் சுழிமுனையில் செலுத்தினால் அந்தக் காற்று உருத்தரித்த நாடியெனும் சுழிமுனையில் ஒடுங்கும். அவ்வாறு ஒடுங்கினால் மெல்லமெல்ல மும்மலக்குற்றம் நீங்கிவிடும். உருத்தரித்த நாடி என்பது குண்டலினி சக்தி இருக்கும் இடமாகும். அந்த குண்டலினி சக்தி விழிப்படைவதற்கு சில ஆண்டுகளாகலாம். விழிப்படைந்த குண்டலினி சக்தி வினாத்தண்டில் மயிரிழை போன்ற நரம்பு வழியாக உச்சியை வந்தடையும். உச்சியை வந்தடைந்தால் புருவமத்தியில் ஒருவகையான உணர்வும் தோன்றும். அவ்வாறு தோன்றியஉடன் புருவமத்தியின் வழியாக காற்றை உள்ளிழுக்க அக்காற்றானது மயிரிழை போன்ற நரம்பின் வழியாக மூலாதாரத்தை சென்றடைந்து மூலக்கனலை மேலும் தூண்டும்.

இவ்வாறு எழும்பிய மூலக்கனலானது வினாத்தண்டின் வழியாக மேலேறி கபாலத்தின் உச்சியை சென்றடையும். இவ்வாறு சென்றடைந்தவுடன் மேலும் காற்றை ஸ்தம்பிக்க ஸ்தம்பிக்க உள்நாவிற்கு மேலேஉள்ள ஊசிமுனை அளவுள்ள ஜவ்வானது திறந்து அமிழ்தபானம் சிந்தும். இந்த அமிழ்த பானமே பிறவித் துன்பத்தை ஒழிக்கும் மருந்தாகும்.

சிவஞான போதமும் அதன் பன்னிரெண்டு சூத்திரங்களும் இதைப் பற்றியே பேசுவதாகும். ஐந்தவத்தை என்பது சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என ஐந்தாகும். சாக்கிரம் என்பது லலாட்ம் அல்லது ஆக்ஞை அல்லது புருவ மத்தியாகும். வாசி வசப்பட்டப்பின் புருவமத்தியில் மனம் ஒடுங்கி கூர்பார்வை செலுத்த வேண்டும். மனம் ஒருநிலைப்பட்டு கூர்பார்வை செலுத்தினால்தான் மூலக்கனல் தோன்றும். ஆனால் மனம் ஒருநிலைப்படாது. இவ்வாறு மனம் ஒருநிலைப்படாமல் போராடுவதே அவஸ்தையாகும். இது சாக்கிர அவஸ்தை எனப்படும். இதற்கு முன்செய்த வினையே காரணமாகும். ஆசான் துணையிருந்தால் மனம் ஒருநிலைப்படும்.

பூசிக்க வொட்டாது மனந்தானப்பா
போதங்கள் மீதேறிச் செல்லொட்டாது
பூசிக்கவொட்டாது அஞ்சிலொன்று
புகழான பூரணத்தை நாடொட்டாது
காசிக்குப் போனாலுந் தீர்க்கொட்டாது
கர்மவினை தன்னைவிட்டுப் போமோமைந்தா
தேசிகன்றன் திருவருளை நாடொட்டாது
செப்பரிய ரெண்டெழுத்தின் சோதிதானே.
– தெட்சிணாமூர்த்தி ஞானம் 10ல் கவிஎண் 1.

குரு அருளால் முன்செய்த வினைகள் நீங்கினால் மனமும் ஒடுங்கும், மூலக்கனலும் தோன்றும், அமிழ்தபானமும் சிந்தும். அமிழ்தபானத்தை உண்டால் உடல்மாசும் உயிர்மாசும் நீங்கும். அப்போது புருவமத்தியில் கோடி சூரியபிரகாசமுள்ள ஒளி ஒன்று தோன்றும். அந்த ஜோதியைக் கண்டவர்கள் சொல்லொண்ணா பேரானந்தம் அடைவர். இதுவே குருஅருளால் பெற்ற பெரும் பேறாகும்.

கனவில் பாம்பு துரத்துவது போலும்; ஒருவர் நம்மை கொலை செய்யவருவது போலும் கனவு காண்பார்கள். அப்போது மனதில் ஒருவித பயம் தோன்றும். இதுவே சொப்பன அவஸ்தையாகும். இதன் இடம் கண்டஸ்தானம்.

சுழுத்தி என்பது தூக்கமாகும். தவத்தை மேற்கொண்டவர்கள் அதிக நேரம் தூங்கக்கூடாது. அவ்வாறு நீண்ட நேரம் கண்விழித்திருப்பதும் ஒருவித அவஸ்தையாகும். இதன் இடம் இதயம்.

துரியம் என்பது உந்திகமலமாகும்.

துரியாதீதம் என்பது உந்திக்கமலத்திற்கு கீழ்பகுதியாகும். இவ்வைந்து அவஸ்தைகளும் காமதேகத்தினால் வரும் அவஸ்தைகளாகும்.

# ஐந்தாம் சூத்திரம்

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

– சிவஞானபோதம் – ஐந்தாம் சூத்திரம்.

“விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந்து அறியா ஆங்கவை போலத்
தாந்தம் உணர்வின் தமியருள்
காந்தம் கண்ட பசாசத் தவையே.”

மகான் மெய்கண்ட தேவரிடம் சீடர்கள் இறைவனைப் பற்றியும், இறைவனைப் பூசிக்கும் முறையைப் பற்றியும் கேட்டார்கள். ஆசானும் மனம் மகிழ்ந்து இறைவனை பூசிக்கும் முறையை உபதேசித்தார். உபதேசம் பெற்ற சீடர்களும் தமது குருவான மகான் மெய்கண்ட தேவரின் திருவடிகளை பூசித்து ஆசி பெற்று இறைவனை பூசித்தனர். இறைவனும் சீடர்களின் பூஜைக்கு மனமிரங்கி அவர்தம் சிந்தையில் கலந்து மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவற்றின் இரகசியங்களையும், அவற்றை கட்டுப்படுத்துவது பற்றியும், தன்வயப்படுத்துவது பற்றியும் உணர்த்தினார். இறைவன் திருஅருளால் உணரப்பெற்ற சீடர்கள் இறைவனின் திருவடியைப்பற்றி பொறிபுலன் அடக்கத்தோடு பூசித்தனர். அப்பூசைகளின் விளைவாக காந்தத்தை கண்ட இரும்புத்துகள் காந்தத்துடன் தானே சென்று சேர்ந்து கொள்வது போல சீடர்களும் இறைவனது திருவடியை அடைந்தனர் என்பதை மகான் மெய்கண்ட தேவர் இவ்வைந்தாம் சூத்திரத்தின் மூலம் விளக்குகிறார்.

இதன்படி குருநாதர் உணர்த்தினாலன்றி இதன் இரகசியம் புரியாது. இதன் இரகசியம் இறைவனால் உணர்வில் உணர்த்தப்பட வேண்டுமேயன்றி சொல்வதாலோ, கேட்பதாலோ, படிப்பதாலோ அறிய இயலாது என்பது விளங்கும்.

சிவனை வழிபட்டார் எண்ணிலாத் தேவர்
அவனை வழிபட்டங் காமாறொன் றில்லை
அவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபடிற் கூடலு மாமே.

– திருமந்திரம் – இதோபதேசம் – 2119.

எனவே குரு அருள் இன்றி இறையருள் பெற முடியாது என்பது பெரியோர் வாக்காகும்.

# ஆறாம் சூத்திரம்

உணருரு வசத்தெனி னுணரா தின்மையின்
இருதிற னல்லது சிவசத் தாமென
இரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.
– சிவஞானபோதம் – ஆறாம் சூத்திரம்.

“உணருரு அசத்துஎனின் உணராது இன்மையின்
இருதிறன் அல்லது சிவசத்தாம் என
இரண்டு வகையின் இசைக்கும் மன்உலகே”

உரு என்பது உடம்பு. அதாவது தூலதேகம். இது சகசமலமாகிய மும்மலத்தால் ஆனது. மும்மலத்தாலான இத்தேகம் அசத்தாகும். அசத்தாகிய இத்தேகத்தினால் இறைவனை அறிய இயலாது. ஏனெனில் உடல்மாசு காரணமாக உயிர் மாசுபடும். உயிர்மாசின் காரணத்தால் சத்தாகிய உண்மைப் பொருளை அறிய முடியாது. எனவே குருஅருளாலும் இறைவன் திருஅருளாலும் அசத்து எனப்படும் மும்மலக் குற்றத்தாலான தூலதேகத்தை பற்றியும் சத்தாகிய சூட்சும தேகத்தைப் பற்றியும் அறிய முடியும். அசத்தை அறிவதற்கும் சிறப்பறிவு வேண்டும். சத்தை அறிவதற்கும் சிறப்பறிவு வேண்டும். தூலத்தை பற்றி அறிவதும், சூட்சுமத்தைப் பற்றி அறிவதும் இருதிறன் எனப்படும். இதுவே சிறப்பறிவாகும்.

சத்தே சிவமாகவும், சிவமே சத்தாகவும் சிவசத்தாம் என்று அறிவுடையவர்கள் சொல்வார்கள். “உலகு என்பது உயர்ந்தோர் மாட்டு” என்று சொல்வார்கள். எனவே சத்தே சிவமாகவும் சிவமே சத்தாகும். இதை உண்மைப் பொருளுணர்ந்த ஞானிகளே சொல்வார்கள்.

இந்த உடம்பானது குளிர்ச்சியும் வெப்பமும் கலந்ததாகும். குளிர்ச்சி சக்தியாகவும், வெப்பம் சிவமாகவும் உள்ளது. வெப்பம் மிகுந்தால் அதாவது சிவம் மிகுந்தால் சக்தியாகிய குளிர்ச்சி வற்றிவிடும். சக்தியாகிய குளிர்ச்சி வற்றியபின் நிலைத்து நிற்பது சிவமாகிய வெப்பம் மட்டுமே. எனவே உடம்பென்பது சிவசக்தியாகும். இதையே அர்த்தநாரி என்று கூறுவர்.

தண்டறு சிந்தை தபோதனர் தாமகிழ்ந்
துண்டது மூன்று புவனமும் உண்டது
கொண்டது மூன்று புவனமும் கொண்டதென்
றெண்டிசை நந்தி எடுத்துரைத் தானே.
– திருமந்திரம் – மகேசுவரபூஜை – 1858.

இதில் தண்டறுசிந்தை என்பது குளிர்ச்சியாகிய சக்தியை அறுப்பது எனப்பொருள்படும். அங்ஙனம் குளிர்ச்சியாகிய சக்தியை அறுத்து வெற்றி கண்டவர்களே ஞானிகள் ஆவார்கள். அவர்களே முக்காலமும் உணர்ந்த முனிவர்கள் ஆவார்கள். அவர்கள் ஒரு அன்பர் வீட்டில் ஒரு நேரம் உணவு மகிழ்ந்து உண்டால் மூன்று புவனங்கள் உண்டதற்கு சமமாகும். எனவே அத்தகு ஞானிகள் உண்ணும் உணவு அவர் மகிழ்ந்து உண்ணும் உணவாக இருக்க வேண்டும். ஒரு முற்றுபெற்ற ஞானி ஒரு வீட்டில் உணவு உண்டால் மூன்று புவனங்களில் உள்ளவர்கள் உணவு உண்டதற்கு ஒப்பாகும். அந்த இல்லத்தார் மூன்று புவனங்களுக்கு உணவளித்த புண்ணியத்தை பெறுவார்கள். "எட்டு திசைக்கும் தலைவனாகிய நந்தீசன் இதை எடுத்துச் சொன்னார்" என கூறுகிறார் மகான் திருமூலர்.

அகரம் ஆயிரம் அந்தணர்க் கீயிலென்
சிகரம் ஆயிரஞ் செய்து முடிக்கிலென்
பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரிலை என்பது நிச்சயந் தானே.

– திருமந்திரம் – மகேசுவரபூஜை – 1860.

பகரும் ஞானி என்பது உண்மைப் பொருள் உணர்ந்த ஞானிகளை குறிக்கும். உண்மைப் பொருளுணர்ந்த ஞானிகள் சொற்கள் ஒவ்வொன்றும் பிறவிப்பிணிக்கு மருந்தாக அமையும்.

மகான் மெய்கண்ட தேவர் உண்மைப்பொருளை அதாவது மெய்ப்பொருளை அறிந்தவராவார். மகான் மெய்கண்ட தேவரின் சிவஞான போதம் என்ற நூலில் உள்ள 12 சூத்திரங்களும் பிறவிப்பிணிக்கு மருந்தாக உள்ளது. எனவே அவர் திருவடியை பூசித்து உண்மைப் பொருளை அறிந்து பேரின்ப வாழ்வை பெற்று இன்புற்று வாழ்வோம்.



# ஏழாம் சூத்திரம்

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலின்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.
– சிவஞானபோதம் – ஏழாம் சூத்திரம்.

யாவையும் சூனியம் சத்தெதிர் ஆகலின்
சத்தே அறியாது அசத்துஇலது அறியாது
இருதிறன் அறிவுளது இரண்டல ஆன்மா.

இறைவன் எல்லா உயிர்களையும் படைக்கும்போதே அவ்வுயிர்களின் முடிவையும் அதாவது அதன் இறப்பையும், அது நேரும் காலத்தையும் சேர்த்தே படைக்கிறான். இவ்வாறு அனைத்து உயிர்களையும் தோற்றுவித்து இறுதியில் சூனியமாக ஆக்கிவிடும் இறைவனது செயலிற்கு எதிராக சத்தானது இருக்கிறது. அந்த சத்தை சூனியமாக்க முடியாது. எனவே சத்தானது சூனியத்தை எதிர்க்கும் வல்லமை உடையதாகும். மனிதனின் உடம்பில் உள்ள சுக்கிலம் அல்லது விந்தானது சத்தும் அசத்துமாக உள்ளது. இது மும்மலக் குற்றத்தால் வந்ததாகும். ஆசான் துணைகொண்டு பிராணாயாமம் எனப்படும் வாசி யோகம் செய்யும் பொழுது குருஅருளால் மூலக்கனல் தோன்றும். மூலக்கனல் தோன்றும்போது உடம்பிலுள்ள அசத்தான அசுத்த சுக்கிலம் நீர்த்து போய்விடும். சத்தாகிய சுத்த சுக்கிலம் நிலைபெற்று இருக்கும். இச்சத்தாகிய சுத்த சுக்கிலமே என்றும் மரணமில்லாப் பெருவாழ்வை தரும்.

இவ்வாறு நிலைபெற்ற சுத்த சுக்கிலம் மூலக்கனலினால் வற்றிவிடும். மூலக்கனல் ஏறஏற இந்த சுக்கிலமானது அந்த தேகத்தினுள்ளேயே தேகத்தோடு இரண்டற கலந்துவிடும். மனிதன் பெண்போகம் கொள்ளாவிட்டாலும் ஒரு குறிப்பிட்ட நாட்களுக்கு பின் தானே சுக்கிலமானது உடம்பிலிருந்து வெளியேறிவிடும். ஆனால் ஞானிகளது உடம்பில் மூலக்கனல் மிகுந்ததால் சுக்கிலம் வெளியர்காமல் உள்ளேயே தங்கிவிடும்.

அத்தகு சத்தானது அனந்த தாத்பரியம் அதாவது கணக்கிலடங்கா தன்மை உடையது.

அங்கிமி காமைவைத் தானுடல் வைத்தான்
எங்குமி காமைவைத் தானுல கேழையுந்
தங்கிமி காமைவைத் தான்தமிழ்ச் சாத்திரம்
பொங்கி மிகாமைவைத் தான்பொருள் தானுமே.
– திருமந்திரம் – திருமூலர் வரலாறு – கவி எண் 87.

இங்கு திருமூலர் "தங்கி மிகாமை வைத்தான் தமிழ் சாத்திரம்" என்கிறார். எந்த ஒரு சாத்திரமும் ஒரு குறிப்பிட்ட எல்லைக்கு மேல் பொருளை விளக்கமாக சொல்லாது என்றும், பொங்கி மிகாமை வைத்தான் என பொருள் கூறுவது சம்பிரதாய இரகசியமாகும். ஒரு மனிதன் பெண்போகம் கொள்ளாமல் இருந்தாலும் ஒரு குறிப்பிட்ட நாட்களுக்கு மேல் அவனுள் உள்ள சுக்கிலமானது தானே வெளியாகிவிடும். ஆனால் ஞானிகளுக்கு ஆசான் ஆசியால் அவ்வாறு வெளியேறாது, உடம்பினுள்ளேயே தங்கி உடம்போடு கலந்துவிடும் என கூறுகிறார்.

இறைவன் உயிர்களை படைக்கும்போதே அதனது இறுதி முடிவையும் அதாவது சூனியத்தையும் சேர்த்தே படைக்கிறான் என்பதை சத்தும் அறியாது, அசத்தும் அறியாது. ஆனால் ஆன்மா அறிய முடியும். ஆன்மாவாகிய அறிவு இரண்டு அல்ல ஒன்றுதான். ஆனால் அந்த ஆன்மாவிற்கு இருதிறன் உள்ளது. ஒன்று சத்தைப் பற்றி அறிவதும், மற்றொன்று அசத்தைப்பற்றி அறிவதுமாகும். இவ்வாறு இவ்விரண்டைப் பற்றியும் ஞானிகளே அறிவார்கள். இவ்விரண்டைப் பற்றி நன்கு அறிந்து மரணத்தை வென்றவர்தான் மகான் மெய்கண்ட தேவராவார்.

ஞானிகளாகிய ஒன்பது கோடி சித்தர்களும் ஆசான் அகத்தீசன் ஆசியால் சத்தையும், அசத்தையும் அறிந்து சத்தை நிலைப்படுத்திக் கொண்டவர்கள் ஆவார்கள். அவ்வாறு நிலைப்பெற்ற சத்தாகிய சுத்த சுக்கிலம் தேகமெங்கும் இரண்டறக்கலந்து தேகத்தை இரும்புபோல உறுதியாக்கி விடும். அத்தேகத்தை எந்த கொலைக் கருவிகளாலும் கொல்ல முடியாது.

ஒழியாத விந்து வுடன்நிற்க நிற்கும்
அழியாப் பிராணன் அதிபலஞ் சத்தி
ஒழியாத புத்தி தபஞ்செப மோனம்
அழியாத சித்தியுண் டாம்விந்து வற்றிலே.

– திருமந்திரம் – விந்து ஜயம் – போக சரவோட்டம் – கவிஎண் 1948.

வற்ற அனலைக் கொளுவி மறித்தேற்றித்
துற்ற சுழியனல் சொருகிச் சுடருற்று
முற்று மதியத் தமுதை முறைமுறை
செற்றுண் பவரே சிவயோகி யாரே.

– திருமந்திரம் – விந்து ஜயம் – போக சரவோட்டம் – கவிஎண் 1949.

மனிதன் காமவயப்பட்டு பெண்ணுடன் கூட நினைக்கும் பொழுது அவன் சிந்தனையாக இருக்கிறான். பிறகு பெண்ணுறவு கொண்டபின் ஆண்பாலில் சுக்கிலமாகவும் பெண்பாலில் சுரோணிதமாகவும் மாறுகிறான்.

இவை இரண்டும் சேர்ந்து பெண்ணின் கருப்பையில் கருத்தரித்தவுடன் மாதவிடாயாகிய தீட்டு நின்றுவிடும். பத்துமாதம் தீட்டு வெளியேறாமல் அதுவே குழந்தையாக உருப்பெற்று குழந்தையாக மாறுகிறது. குழந்தை பிறந்தவுடன் அதன் உடல் மென்மையாக இருக்கும். நாளாக நாளாக அக்குழந்தை வளர்ந்து திண்மையும் மென்மையும் கலந்து தேகத்தை பெற்று வளர்ந்து ஆண்டுகள் சில கடந்து வாலிபனாகி திடமான தேகத்தை பெறுகிறது. அதுவே பின்னர் நாட்செல்லசெல்ல நரை, திரை, மூப்படைந்து வயோதிகனாகி தளர்ந்து பின் இறந்து விடுகிறான்.

இவ்வாறு பிறந்து இறக்கும் வயோதிகனுக்கு, தான் குழந்தையாகவும், வாலிபனாகவும், பின் வயோதிகனாகவும் மாறியதும் மாற்றத்தின் பரிணாம வளர்ச்சியைப்பற்றியும் அவனுக்கே தெரியாது. இதைப்பற்றி வாலிபனுக்கும் தெரியாது. இறைவன் உயிர்களை படைப்பதும் பின்அவற்றை காத்து இரட்சித்து பின் அவ்வுயிர்களை அழித்து சூனியமாக மாற்றுவதும் இயற்கையாகவே நடைபெறுகிறது. இதை யாரும் அறிய முடியாது. இதைப்பற்றி நன்கு அறிந்தவர்கள் ஞானிகளாவார்கள்.

ஞானிகள் மகான் அகத்தீசரின் திருவடி துணை கொண்டு தமக்கு வரும் நரை, திரை, மூப்பை அறிந்து அதை வெல்ல இடது கலையாகிய சந்திரகலையையும் வலது கலையாகிய சூரியகலையையும் பதியெனும் புருவமத்தியாகிய சுழிமுனையில் ஒடுக்குகின்றனர். இருகலைகளையும் சமப்படுத்தி அதாவது இடது கலையையும் வலது கலையையும் சேர்த்து புருவமத்தியில் செலுத்தினால் அக்காற்று குண்டலியெனும் மூலாதாரத்தில் தங்கிவிடும். அவ்வாறு தங்கிய காற்று மூலக்கனலை தோற்றுவித்து அதுவே நமது உடம்பிலுள்ள அசத்தாகிய அசுத்த சுக்கிலத்தை நீர்த்துப்போக செய்துவிடும். சத்தாகிய சுத்த சுக்கிலம் உடம்பினுள்ளேயே தங்கிவிடும். நமது உடம்பிலுள்ள அசத்திற்கும் இதைப்பற்றி தெரியாது. சத்திற்கும் இதைப்பற்றி தெரியாது. சத்தையும் அசத்தையும் பற்றி அறிய வேண்டுமென்றால் ஆசான் அகத்தீசரின் ஆசி வேண்டும். சத்தைப் பற்றி அறிவதற்கும் அறிவு வேண்டும். அசத்தைப் பற்றி அறிவதற்கும் அறிவு வேண்டும்.

எல்லா உயிரினங்களிலும் ஆன்மா இருந்தபோதும், உன்னதமான பஞ்சபூதத்தால் ஆன மனிததேகத்தில் மட்டுமே ஆறாவது அறிவு உள்ளது. இந்த ஆறாவது அறிவே ஆன்மாவாக உள்ளது. ஆன்மாவே அறிவாக உள்ளது. இத்தகு ஆன்மாவாகிய அறிவு இருவகை திறன்களை உடையதாய் உள்ளது. இருவகை திறனென்பது சத்தையும், அசத்தையும் பற்றிஅறியும் அறிவாகும். எல்லா உயிரினங்களின் உயிர்களையும் சூனியமாக்கும் இறைவன் சத்தைப் பற்றி அறிந்த மனிதனை மட்டும் சூனியமாக்க முடியாது.

அத்தகு சத்தை அறிந்து நிலைப்படுத்திக் கொள்வதற்கு புண்ணியபலமும், இறையருளும், குருஅருளும் வேண்டும். இம்மூன்றும் இருந்தால்தான் சத்தை அறிந்து நிலைப்படுத்திக் கொள்ள முடியும். இந்த அற்புத வாய்ப்பை மனிதனுக்கு மட்டும் இறைவன் படைத்துள்ளான்.

மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே.
– திருமந்திரம் – பிண்டலிங்கம் – கவி எண் 1726.

மனித தேகத்தின் தோற்றம் சிவலிங்கமாகவும், அதுவே சிதம்பரமாகவும், மேலும் அதுவே சதாசிவமாகவும் மற்றும் திருக்கூத்துமாகும். இதில் திருக்கூத்து என்பது சுழிமுனைக்கதவு திறந்தபின் புருவமத்தியாகிய சுழிமுனையில் சந்திர ஒளி, சூரிய ஒளி, வன்னியாகிய அக்னிஒளி ஆகிய முச்சுடர்களும் மாறிமாறி இயங்கும். இதுவே திருநடனம் அல்லது திருக்கூத்து எனப்படும்.

இவ்வரிய வாய்ப்பு மனிதருக்கு இருந்தபோதிலும் புண்ணியபலமும், குருஅருளும், இறையருளும் இல்லாததால் மனிதர்கள் இந்த வாய்ப்பை அடையமுடியவில்லை.

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணார்
பெறுதற் கரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே.
– திருமந்திரம் – கேடு கண்டிரங்கல் – கவிஎண் 2090.

பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் தவத்தால் பெற்றதுதான் இந்த மானுடதேகம். அத்தகு அருந்தவத்தால் பெறுவதற்கரிய இந்த மானுட தேகத்தை பெற்றும் பெருமைக்குரிய இறைவனை அறிந்து பூசித்து ஆசிபெறமாட்டார்கள். அற்புதமான இந்த தேகம் பெற்றும் இறைவன் அருள் பெறாமையால் எல்லா உயிர்களும் பெறுதற்கரிய பேரின்ப நிலையை பெறாமல் இறந்து விட்டனர் என மகான் திருமூலதேவர் கூறுகிறார்.

ஆறறிவு படைத்த மனிதன் மட்டும் மற்ற உயிர்களிடத்து வேறுபட்டு ஆறாவது அறிவை பெற்றுள்ளான். மற்ற ஜீவராசிகள் பார்த்தாலும் அவை பார்த்த பொருள்களின் தன்மையை இன்னதென்று உணர முடியாது. கேட்டாலும் கேட்ட சப்தத்தின் தன்மையை உணரமுடியாது. முகர்ந்தாலும் வாசனையின் தன்மையை உணரமுடியாது. ஸ்பரிசத்தால் உணர்ந்தாலும் அது

இத்தன்மையுடையது என பிரித்தறிய முடியாது. ஆனால் ஆறறிவு படைத்த மனிதனோ தேகத்தைப் பற்றியும், அதில் அமைந்துள்ள புலன்களைப்பற்றியும் உணரவும் அப்புலன்கள் வாயிலாக பெறப்படும் உணர்வுகளின் தன்மைகளைப் பற்றியும் பகுத்து உணரமுடியும். இவ்வாறு பகுத்து உணரும் அறிவே ஆறாம் அறிவாகும்.

காலம் உள்ளபோதே அதாவது இளமை இருக்கும்போதே காரணகுருவை அறிந்து அவரது உபதேசத்தை பெற்று ஜென்மத்தை கடைத்தேற்றிக் கொள்ள வேண்டும். காரணகுரு, காரியகுரு என இருவகையினர் ஆவர். காரிய குரு எனப்படுபவன் பொருளை இச்சித்து செயல்படுபவனாவான். எந்தப் பொருளின் மீதும் பற்றற்று இருப்பவரே காரணகுரு ஆவார்.

மகான் அகத்தீசர், மகான் நந்தீசர், மகான் திருமூலதேவர், மகான் போகர், மகான் கருவூர்தேவர், மகான் காலாங்கிநாதர், மகான் இராமலிங்க சுவாமிகள் போன்ற ஞானிகளே காரணகுரு ஆவார்கள். ஆசான் அகத்தீசரின் ஆசிபெற்ற ஒன்பது கோடி ஞானிகளும் காரணகுரு ஆவார்கள்.

அத்தகு காரண குருவின் திருவடிப்பற்றி பூசித்து ஆசிபெறாமல் உடம்பைப் பற்றியும், உயிரைப்பற்றியும் அறிய முடியாது. சத்தைப் பற்றியும், அசத்தைப் பற்றியும் அறிய முடியாது.

மகான் மெய்கண்ட தேவர் சத்தையும், அசத்தையும் பற்றி அறிந்தவராவார். மகான் மெய்கண்ட தேவர் பொய்யையும், மெய்யையும் அறிந்தவராவார். பொய்யை நீக்கி மெய்யை உறுதிப்படுத்தி கொண்டவராவார். மகான் மெய்கண்ட தேவரின் திருவருள் துணைகொண்டு உரை எழுதப்பட்டுள்ளது. நமது அறிவு கொண்டு சிவஞான போதத்திற்கு உரை எழுதப்படவில்லை.



சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு,
தவத்திரு ரெங்கராஜ தேசிக சுவாமிகள்

தானமும் தவமும் தான்செய் வாராகில்
வானவர் நாடு வழிதிறந்திடுமே.
— ஔவைக்குறள்.

குருவின் அடிபணிந்து கூடுவது அல்லார்க்கு
அருபமாய் நிற்குஞ் சிவம்.
— ஔவைக்குறள்.

**குரு அருளே திருவருள்**

# எட்டாம் சூத்திரம்

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டந்நிய மின்மையி னரன்கழல் செலுமே.

– சிவஞானபோதம் – சாதனஇயல் – எட்டாவது நூற்பா.

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே."

மகான் மெய்கண்ட தேவரிடம் குருபக்தியுடன் ஒரு தொண்டன் தொண்டு செய்து வந்தான். அப்பிறப்பில் முதுமை அடைந்து இறந்து விட்டான். பின் அடுத்த ஜென்மத்தில் முன்செய்த தீவினை காரணமாக 30 வயது வரையிலும் பொறிபுலன் வழியே சென்று நிலையில்லாதவற்றை நிலையென்று மயங்கி வழிதவறி போகும்போது மகான் மெய்கண்ட தேவர் அவனை அழைத்து முன் ஜென்மத்தில் என் திருவடியை பூஜித்தும் தூய மனதோடு தொண்டும் செய்திருக்கிறாய். வினையின் காரணமாக இந்த ஜென்மத்தில் 30 வயதைக் கடந்து விட்டாய். இனி நான் உனக்கு தவத்தைப் பற்றி உணர்த்தியும் உம்முள் கலந்தும் தவம் மேற்கொள்ள செய்வேன் என கூறியதோடு அத்தொண்டன் செய்த தொண்டிற்காக தவத்தைப்பற்றி உணர்த்தியும், தொண்டனோடு மகான் மெய்கண்ட தேவர் இரண்டற கலந்து தவத்திற்குரிய உணர்வையும், அறிவையும் தந்து தவம் செய்வதற்கான இடம், பொருள், ஏவலையும் தந்து தவத்திற்குண்டான உதவிகளையும் தந்து, தவத்தை முடித்து இறைவனோடு இரண்டற கலக்க செய்கிறார். ஆக குருவும் சீடனும் வேறுபாடு இல்லாது இரண்டற கலந்து விட்டால் இறைவன் திருவடியை அடையலாம்.

பறவைகளை வேட்டையாடுகிறவர்கள் கௌதாரி எனும் பறவையை வளர்ப்பார்கள். அதை கூண்டில் அடைத்து வைத்து அவர்கள் புதரில் (செடி) மறைந்து கொண்டு ஒருவித சப்தம் எழுப்புவார்கள். அதை கேட்ட கௌதாரி தானும் சப்தம் எழுப்பும். கூண்டில் அடைபட்டுள்ள கௌதாரியின் சப்தம் கேட்டவுடன் காட்டில் அந்த பகுதியில் உள்ள கௌதாரி பறவைகள் அனைத்தும் வேகமாக ஓடிவரும். அவ்வாறு அவை வரும் வழியில் வலைவிரித்து வைத்திருப்பார்கள். வேகமாக வரும் கௌதாரி பறவைகள் அந்த வலைப்பகுதியில் வந்தவுடன் மறைத்து வைக்கப்பட்ட சூட்சும கயிற்றை இழுத்தவுடன் ஓடிவந்த கௌதாரி பறவைகள் அந்த வலையில் சிக்கிக்கொள்ளும்.

தவம்மறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புள்சிமிழ்த் தற்று.

– திருக்குறள் – கூடாஒழுக்கம் – குறள் எண் 274.

வேடர்களின் வஞ்சனையான போலியான சப்தத்தைக் கேட்டு பறவைகள் ஓடிவந்து வலையில் அகப்படுவது போல நிலையில்லாதவற்றை நிலையென்று நம்பி பொறிபுலன்கள் நம்மை வஞ்சிக்கும். ஐம்புலவேடர் என்பது மெய், வாய், கண், மூக்கு, செவி எனும் ஐம்புலன்களாகும். இவ் ஐம்புலன்களும் நிலையில்லாதவற்றை நிலையென நம்ப செய்து மீண்டும் பிறவியை உண்டாக்கும். குருநாதன் உபதேசத்தாலும் அவரது அருளாலும் பொறிபுலனை வென்று இறைவனடி சேரலாம்.

ஜென்மத்தை கடைத்தேற்ற விரும்புகின்ற தொண்டன் காரண குருவாகிய ஞானிகளிடம் பணிந்து ஞானிகளுக்கு தொண்டு செய்தால் அந்த தொண்டின் பயனால் ஞானிகள் தொண்டு செய்தவனின் பிறவித்துன்பத்தை ஒழிப்பதோடு இறைவன் திருவடியை அடைவதற்கும் அருளும் செய்வார்கள்.

காரிய குரு என்பவர் பொருள் பற்று உடையவராகவும், காமுகனாகவும் இருப்பார். ஆனால் காரணகுரு என்பவர் பொருள் பற்றற்றவராகவும், காமமற்றவராகவும் இருப்பார். இவ்வாறு பற்றற்ற காரண குருவிற்கு செய்யும் தொண்டு வீண்போகாது. அது என்றும் நமக்கு துணையாக இருக்கும்.

வளர்ந்தென – 30 வயதிற்கு மேல் கடத்தல்

அயர்ந்தன – மயங்குதல்

மகான் அகத்தீசர், மகான் நந்தீசர், மகான் திருமூலதேவர், மகான் கருவூர் முனிவர், மகான் மெய்கண்ட தேவர், மகான் மாணிக்கவாசகர், அருட்பெருஞ்ஜோதி ஆண்டவராகிய இராமலிங்க சுவாமிகள் போன்ற ஞானிகள் திருவடியை தினமும் பூஜிக்காமல் உண்மை பொருளாகிய மெய்ப்பொருளை அறிய முடியாது. ஜென்மத்தை கடைத்தேற்ற விரும்புகிறவர்கள் மேற்கண்ட ஞானிகளை தினமும் இடையறாது பூஜித்து வரவேண்டும். மேற்கண்ட ஞானிகள்தான் பிறவித்துன்பத்தை அறியச்செய்து பிறவித் துன்பத்தை அறுப்பார்கள்.

குருவி னடிபணிந்து கூடுவ தெல்லார்க்
கருவமாய் நிற்குஞ் சிவம்.

– ஔவைக்குறள் – தன்பால் குருவழி – குறள் எண் 3.

தலைப்பட்ட சற்குருவின் சன்னதியி லல்லால்
வலைப்பட்ட மானதுவே யாம்.

– ஔவைக்குறள் – தன்பால் குருவழி – குறள் எண் 4.

நீலச் சிகண்டியி லேறும் பிரானெந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவ யோகிகளே
காலத்தை வென்றிருப்பார் மரிப்பார்வெறுங் கர்மிகளே.

– கந்தரலங்காரம் – 26.

# ஒன்பதாம் சூத்திரம்

ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாசமொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.
– சிவஞானபோதம் – ஒன்பதாவது நூற்பா.

"ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினில் சிந்தை நாடி
உராத்துனைத் தேர்ந்தெனப் பாசம் ஒருவத்
தண்ணிழலாம் பதிவிதி எண்ணும் அஞ்செழுத்தே"

மும்மலத்தாலான இவ்வுடம்பாலும் அதன் சிரசிலுள்ள கண்ணின் உதவியாலும் உண்மைப் பொருளை அறிய முடியாது. பாசம் என்பது மும்மலத்தாலான குற்றமாகும். அதனால் பதியை அறிய முடியாது. மும்மலத்தால் ஆன உடம்பே பாசமாகும். மும்மலத்தால் ஆன இவ்வுடம்பினால் பெற்ற அறிவினால் உண்மை பொருளாகிய, பதியாகிய தலைவனை அறிய முடியாது. குருவின் உபதேசம் பெற்றால் அதாவது மகான் மெய்கண்ட தேவரின் உபதேசம் பெற்றால் உண்மைப் பொருளை அறியக்கூடிய சிறப்பறிவு உண்டாகும். குரு உபதேசம் பெறாவிட்டால் மும்மலத்தாலான இவ்வுடம்பிலுள்ள கண்கள் ஊனக்கண்களாகும். அதாவது கண்ணிருந்தும் குருடனைப்போல உண்மைப் பொருளை காணமுடியாது. குருஉபதேசம் பெற்றால் இத்தேகத்தில் தோன்றும் ஞானக்கண்ணாகிய சிறப்பறிவினால் அவ்வுண்மைப் பொருளாகிய இறைவனை காணலாம். குரு உபதேசத்தினால் தோன்றும் சிறப்பறிவினால் செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை(உடம்பு) நிலையாமை ஆகியவற்றை உணர்ந்து ஆராய்ந்து தெளிந்து, உண்மைப் பொருளை ஞானக்கண்ணாகிய சிறப்பறிவினால் அறியலாம்.

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.
– திருமந்திரம் – மோனசமாதி – கவிஎண் 2944.

மும்மலத்தாலான பாசதேகத்தினால் ஆன இவ்வுடம்பிலுள்ள கண்களால் பதியாகிய தலைவனை அறிய முடியாது. மகான் திருமூலர்,

மகான் மெய்கண்டதேவர், மகான் நந்தீசர், மகான் அகத்தியர் போன்ற முதுபெரும் ஞானிகளின் ஆசியாலும் அருளாலும் தோன்றும் சிறப்பறிவினால் உணரக்கூடியதுதான் யோகஞான பேரின்ப நிலையாகும். அதுவே அகக்கண்களாகும். இவ்வகக்கண்களால்தான் பதியாகிய தலைவனை காணமுடியுமே அன்றி இத்தேகத்தின் கண் உள்ள சாதாரண கண்களால் அறிய முடியாது. இதை உணரலாமேயன்றி பிறிதொருவருக்கு சொற்களாலோ எழுத்திலோ சொல்ல இயலாது. எவ்வாறெனில் தாய் தன் கணவனோடு தேகசம்மந்தத்தினால் பெற்ற சிற்றின்பத்தை தன் மகளுக்கு சொல்ல இயலாது. அதுபோன்றே குருநாதன் ஆசியால் அவரால் உணர்த்தப்பட, உணரப்பட வேண்டிய ஒன்றே யோக ஞான பேரின்ப நிலையாகும். இந்நிலையே பதியை காணும் நிலையாகும். எனவே காமதேகத்திலுள்ள கண்களால் தலைவனை அறிய முடியாது. தூலதேகம் எனப்படும் இப்புற உடம்பானது மும்மலத்தாலானது. சூட்சும தேகம் எனப்படும் அகஉடம்பானது தூலதேகத்தில் உள்ள மும்மலக்குற்றம் நீங்கிய பின் தோன்றும் ஒளி உடம்பாகும். இந்த ஒளி உடம்பாகிய சூட்சும தேகமே குருஅருளால் பெற்ற வீடுபேறாகும்.

"உராத்துனை தேர்ந்தென பாசம் ஒருவ" என்ற வாக்கியத்திற்கு எடுத்துக்காட்டாக கீழ்க்கண்ட சில கவிகளும் அதற்குரிய விளக்கங்களும் தரப்பட்டுள்ளது.

கானலைமான் நீரெனவே கண்டு செல்லல்போல்
காசினிவாழ் வினைமூடர் கண்டு களிப்பார்
மேனிலைகண் டார்கள்வீணாய் வீம்பு பேசிடார்
மெய்யன்பதம் நாடுவாரென் றாடாய் பாம்பே.

– மகான் பாம்பாட்டிச்சித்தர் (பொருளாசை விலக்கல்) கவி எண் 49.

பங்குனி, சித்திரை போன்ற மாதங்களில் கானகத்தில் உள்ள நீர்நிலைகள் வற்றிவிடும். அக்கோடை காலத்தில் நீர் தாகம் தாங்காத மான்கள் மதியவேளையில் வெப்பத்தினால் கானகத்தில் தோன்றும் கானல்நீரை உண்மையான நீர்நிலையென எண்ணி அதை நோக்கி வேகமாக ஓடும். ஆனால் அவை ஓடஓட அதன் உடம்பிலுள்ள எஞ்சிய நீரும் வியர்வையாக வெளியேறி மிகுந்த தாகம் ஏற்பட்டு உடம்பில் நீர்வற்றி மயங்கி விழுந்துவிடும். அதுபோல உலகிலுள்ள சிலர் செல்வம் நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை போன்றவற்றை உணராது செல்வமும், இளமையும், யாக்கையும் நிலையென்று நம்பி தக்க குருஉபதேசம் பெறாமல் வீணாக அவற்றின் பின் அலைந்து மாண்டு போவார்கள். இது தக்க ஆசான் இல்லாததால் வரும் கேடாகும்.

நிலையில்லாத இந்த வாழ்வை நிலையென்று நம்பாமல் தெளிவடைந்து கடைத்தேறுவதே சிறப்பறிவாகும். இது குரு உபதேசத்தால் பெறும் பயனாகும். இதையே மகான் மெய்கண்ட தேவர் "உராத்துனைத் தேர்ந்தெனப் பாசம் ஒருவ" எனக் குறிப்பிடுகிறார். உரா என்பது கானல்நீராகும். நிலையில்லாத வாழ்வு கானல் நீரிற்கு ஒப்பானது எனக்கூறி செல்வம், இளமை, யாக்கை இவற்றின் தன்மை கானல் நீரைப் போன்று நிலையற்றது; பொய்யானது எனக்கூறுகிறார். "ஒருவ" என்பது நீக்குதல் எனப் பொருள்படும். எனவே இவற்றை அதாவது நிலையற்ற கானல்நீர் போன்ற வாழ்வினை குருஉபதேசம் பெற்று சிறப்பறிவினால் நீக்க வேண்டும் என கூறுகிறார்.

மேலும் மகான் மெய்கண்ட தேவர் தமது அன்பு சீடனை அழைத்து "பல ஜென்மங்களில் உயிர்கொலை தவிர்த்தும், புலாலை மறுத்தும், காலை மாலை சிவபூஜை செய்தும், பசித்த ஏழைகளுக்கு பசியாற்றுவித்தும், புண்ணியத்தை பெற்றிருக்கிறாய், முன் ஜென்மத்தில் என் திருவடியை பற்றி பூசித்து என் ஆசி பெற்றாலும் உன் விதிப்பயன் விளைவாக இந்த ஜென்மத்தில் நிலையில்லாதவற்றை நிலையென்று நம்பி இதுநாள் வரையில் வாழ்ந்து விட்டாய். அதனால்தான் பதியாகிய தலைவனை அடைய முடியாமல் தடைபட்டு விட்டது. எனினும் நீ பல ஜென்மங்கள் செய்த புண்ணியத்தாலும், நீ செய்த பூஜையாலும் என் திருவடியைப் பற்றி பூசித்ததாலும் இனி நீ தலைவனை அடையும் பொருட்டு உனக்கு பஞ்சாட்சரத்தையும், பிரணவ மந்திரத்தையும் உபதேசிக்கிறேன். இனிமேல் உனக்கு தவத்திற்கு உரிய இடம், பொருள் ஏவலையும் அமைத்து தருகிறேன். தவத்தை மேற்கொண்டு ஜென்மத்தை கடைத்தேற்றிக் கொள்வாயாக" என உபதேசிக்கிறார்.

இறைவன் வேறு, நான்வேறு என்ற பேதமற்று தவவலிமையால் இறைவனும் நானும் இரண்டற கலந்து விட்டோம். உனது பிறவித் துன்பமாகிய வெப்பத்தை தணிப்பதற்கு குளிர்ச்சி பொருந்திய நிழல்போல் இருந்து அருள் செய்வேன் என்றும் அருள் செய்கிறார்.

தான்நான் எனும்பேதந் தன்னைத் தவிர்த்தான்நான்
ஆனான்சிற் றம்பலவன் அந்தோநான் – வானாடர்
செய்தற் கரியதவம் செய்தேன் மகிழ்கின்றேன்
எய்தற் கரியசுகம் ஏய்ந்து.

– திருஅருட்பா – ஆறாம்திருமுறை – கவிஎண் **1498.**

*எடுத்துக்காட்டுகள் :*

அற்புதமா யிந்தவுட லாவி யடங்குமுன்னே
சற்குருவைப் போற்றித் தவம்பெற்று வாழாமல்
உற்பத்தி செம்பொன் உடைமைபெரு வாழ்வைநம்பிச்
சர்ப்பத்தின் வாயிற் றவளைபோ லானேனே.

– மகான் பட்டினத்தார் பாடல் – நெஞ்சொடு புலம்பல் – கவிஎண் **12.**

நீரிலெழும் நீர்க்குமிழி நிலைகெ டல்போல
நில்லாதுடல் நீங்கிவிடும் நிச்சய மென்றே
பாரிற்பல வுயிர்களைப் படைத்த வன்றனைப்
பற்றறவேநீ பற்றித்தொடர்ந் தாடாய் பாம்பே.

– மகான் பாம்பாட்டி சித்தர் பாடல் (சரீரத்தின் குணம்) கவிஎண் 64.

காடுமலை நதிபதி காசி முதலாய்க்
காட்கடுக்க ஒடிற்பலன் காண லாகுமோ
வீடுபெறும் வழிநிலை மேவிக் கொள்ளவே
வேதாந்தத் துறையினின் றாடாய் பாம்பே.

– மகான் பாம்பாட்டிச்சித்தர் பாடல் (சரீரத்தின் குணம்) கவிஎண் 88.

பற்றே பிறப்புண்டாக்குந் தாண்ட வக்கோனே – அதைப்
பற்றா தறுத்துவிடு தாண்ட வக்கோனே.

– மகான் இடைக்காட்டுச் சித்தர் பாடல் (நாராயணக்கோனார் கூற்று) கவிஎண் 19.

செவிதனிற்கே ளாதமறை தாண்ட வக்கோனே – குரு
செப்பில்வெளி யாமல்லவோ தாண்ட வக்கோனே.

– மகான் இடைக்காட்டுச் சித்தர் பாடல் (நாராயணக்கோனார் கூற்று) கவிஎண் 22.

எல்லாப் படியாலும் எண்ணினால் இவ்வுடம்பு
பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை – நல்லார்
அறிந்திருப்பார் ஆதலினால் ஆம்கமல நீர்போல்
பிறிந்திருப்பார் பேசார் பிறர்க்கு.

– நல்வழி – கவிஎண் 7.

நில்லாத வற்றை நிலையின என்றுஉணரும்
புல்லறி வாண்மை கடை.

– திருக்குறள் – நிலையாமை – குறள் எண் 331.

நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்
வாள்அது உணர்வார்ப் பெறின்.

– திருக்குறள் – நிலையாமை – குறள் எண் 334.

நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
மேற்சென்று செய்யப் படும்.

– திருக்குறள் – நிலையாமை – குறள் எண் 335.

நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்
பெருமை உடைத்துஇவ் வுலகு.

– திருக்குறள் – நிலையாமை – குறள் எண் 336.

ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப
கோடியும் அல்ல பல.

– திருக்குறள் – நிலையாமை – குறள் எண் 337.

பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.

– திருக்குறள் – துறவு – குறள் எண் 347.

பற்றற்ற கண்ணே பிறப்புஅறுக்கும்; மற்று
நிலையாமை காணப் படும்.

– திருக்குறள் – துறவு – குறள் எண் 349.

மண்ணொன்று கண்டீர் இருவினைப் பாத்திரந்
திண்ணென் றிருந்தது தீயினைச் சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணாவபோல்
எண்ணின்ற மாந்தர் இறக்கின்ற வாறே.

– திருமந்திரம் – யாக்கைநிலையாமை – கவிஎண் 143.

மண் எனப்படும் மாயையாலும், பாவபுண்ணியம் எனப்படும் இருவினைகளாலும் ஆக்கப்பட்டுள்ளது, பாண்டம் எனப்படும் இவ்வுடம்பாகிய மனிததேகம். குயவர்கள் மண்பாண்டம் செய்வார்கள். மண்ணை நன்கு பதப்படுத்தி பின் அவற்றை குடமாகவும், சட்டியாகவும், பானைகளாகவும் செய்வார்கள். இப்படி செய்த பானைகளும் சட்டிகளும், குடங்களும் நீரில் இட்டால் அவை நீரில் கரைந்து விடும். அதுவே அக்குடம், சட்டி, பானைகளை சூளை எனப்படும் நெருப்பில் இட்டு நன்கு சுட்டு விட்டால் பின் அவற்றில் நீர் நிரப்பி வைத்தால் கரையாது. பச்சைமண் நீரில் கரையும். சுட்டமண் நீரில் கரையாது. அதுபோலதான் இத்தேகமும்.

இம்மானுட தேகமானது ஆண்பாலிலுள்ள சுக்கிலமும், பெண்பாலிலுள்ள சுரோணித சேர்க்கையால் வந்ததாகும். பின் அவை கருப்பையில் ஒன்றுகூடி பத்து மாதம் தீட்டு நின்று அவை கருவாகி பின் குழந்தையாக உருவாகிறது. பின் அதுவே வளர்ந்து குழந்தையாகவும், வாலிபனாகவும், வயோதிகனாகவும் முதிர்ச்சி பெற்று நரைதிரை மூப்பு பிணி உண்டாகி இறுதியில் மரணம் நேரிட்டு அழிந்து விடுகிறது. இது பச்சைமண் பாண்டம் போன்றது. ஆனால் அத்தேகம் அழியாத நிலை எய்துவதற்கும் ஒரு உபாயம் உள்ளது.

மகான் திருமூலதேவர், மகான் அகத்தீசர், மகான் நந்தீசர் போன்ற ஞானிகள் திருவடியைப் பற்றி மனமுருகி பூசித்தால் அம்முதுபெரும் ஞானிகளின் ஆசியாலும், அருளாலும் தேகம் அழியாத நிலையை பெறலாம்.

மகான் திருமூலதேவர் நமது உடம்பிலுள்ள இடகலையாகிய சந்திரகலையையும், பின்கலையாகிய சூரிய கலையையும் பதியாகிய புருவமத்தியில் செலுத்தி ஒடுங்கச் செய்வார். பின் அக்காற்று மூலாதாரத்தில் தங்கி மூலக்கனலை தோற்றுவிக்கும். ஆசான் ஆசியால் தோற்றுவிக்கப்பட்ட மூலக்கனலானது பெருகி தொண்ணூற்றாறு தத்துவத்தாலான இத்தேகத்தை சுட்டு அழிவில்லாத தேகமாக மாற்றிவிடும். நிலையற்ற பச்சை மண்ணிற்கு ஒப்பான இத்தேகத்தை குருஅருளாலும் ஆசியாலும் நிலையான சுட்ட பாண்டம் போன்று நிலைபெற்ற தேகமாக மாற்றிக் கொள்ளலாம். இவ்வாய்ப்பை நாமும் பெற வேண்டுமென்றால் மகான் அகத்தீசர், மகான் நந்தீசர், மகான் திருமூலதேவர் போன்ற முதுபெரும் ஞானிகளின் திருவடியை பற்றி மனமுருகி பூசித்தால் நாமும் அழியாத நிலைபெற்ற தேகத்தை பெற்று மரணமில்லா பெருவாழ்வை பெறலாம்.

பண்டம் பெய்கூரை பழகி விழுந்தக்கால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே.

– திருமந்திரம் – யாக்கை நிலையாமை – கவிஎண் 144.

கூரை வீடு கட்டும்போது சுவரெழுப்பி மேற்கூரையில் தென்னை, பனை ஒலைகள் கொண்டு வேய்ந்து அதன் மேல் நெல் மற்றும் கேழ்வரகு போன்ற தானியங்களின் தாள்களை மொத்தமாக போட்டு நன்கு அடர்த்தியாக வேய்ந்து கட்டுவார்கள். அக்கூரை வீடானது புதிதில் நன்றாக இருக்கும். நாட்செல்ல நாட்செல்ல வெப்பத்தாலும், மழையாலும், காற்றினாலும் பாதிக்கப்பட்டு மக்கி ஒருநாள் வலுவிழந்து சரிந்து வீழ்ந்து விடும். அதுபோன்றே மனித தேகமும் இளமையில் வலிமையாகவும் நாட்செல்ல நாட்செல்ல நோய், நரை, மூப்பெய்தி ஒருநாள் மரணம் சம்பவித்து அழிந்துவிடும். இதையறியாது இவ்வுடம்பு கூரைவீட்டை போன்றே ஒருநாள் அழியக்கூடியது என்று உணராது இளமையில் வலுவுள்ளபோது தானும் தன்னைச் சார்ந்தவர்களுக்காகவும் உழைத்து பொருளீட்டி சுவையாக சமைத்து உண்டு, மனைவி மக்களுடன் கூடி குலாவி மகிழ்ந்திருப்பர். ஆனால் மரணம் நேரும்போது நாம் மகிழ்ந்திருந்தபோது மகிழ்ந்திருந்த மனைவி மக்கள், சுற்றம் அனைவரும் நம்முடன் வாரார். இது நிலையாமையாகும்.

ஆனால் அவரே வாரம்தோறும் வியாழன் கிழமையன்று காலை இரண்டு பழம் தேவைப்படின் பால் உண்டும், மதியம் ஒருவேளை மட்டும் சைவ உணவு உண்டு, மாலை இரண்டு பழம் தேவைப்பட்டால் பால் அருந்தி இறைவனை அடையும் பொருட்டு விரதம் மேற்கொண்டும் மகான் திருமூலர்,

மகான் கருவூர் தேவர், மகான் அகத்தியர், மகான் இராமலிங்க சுவாமிகள், மகான் மாணிக்கவாசகர், மகான் திருஞானசம்மந்தர், மகான் சுந்தரமூர்த்தி நாயனார், மகான் திருநாவுக்கரசர், மகான் பதஞ்சலி முனிவர் போன்ற முதுபெரும் ஞானிகளின் திருவடியைப் பற்றி பூசித்தும் வந்தால் மரணம் நேரினும் அவ்விரதமும், ஞானிகள் திருவடியைப் பற்றி பூசித்ததால் பெற்ற ஞானமும் உடன் வரும் அன்றி உடன் மகிழ்ந்திருந்த மக்களும், பெண்டிரும், உறவினரும் வரமாட்டார்கள் என மகான் திருமூலர் கூறுகிறார்.

இந்த மானுடதேகம் நல்வினை தீவினையால் பிணைக்கப்பட்ட உடம்பாகும். அவரவர் வினைக்கேற்ப ஒருநாள் அழிந்தே தீரும். எனவே இவ்வுடம்பு நன்றாக இருக்கும் போதே மனைவி மக்களையும் பாதுகாத்தும், நம்மை நோக்கி வரும் விருந்தை உபசரித்தும், மாதம் ஒருவருக்கோ அல்லது இருவருக்கோ அன்னதானம் செய்தும், புண்ணியபலத்தை பெற்றுக் கொள்ள வேண்டும். ஞானிகள் திருவடிகளை பற்றி பூசிப்பதால் இறையருளும் குருஅருளும் பெறமுடியும். மனிதன் இறக்கும் போது அவனை பின்தொடர்வது அவன் செய்த பூஜையும், புண்ணியமும் ஆகும்.

ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே.

– திருமந்திரம் – யாக்கைநிலையாமை – கவிஎண் 145.

ஒருவன் இறந்தவுடன் அவனது மனைவி மக்களும், பல்வேறு ஊர்களிலிருந்து வரும் அவனது அண்ணன், தம்பி, அக்காள், தங்கை போன்ற உடன்பிறந்தவர்களும், உற்றார் உறவினர்களும் ஒன்று கூடி அழுது புலம்புவார்கள். அதுவரை இறந்தவனுக்கு இட்டிருந்த பெயரை நீக்கிவிட்டு இறந்தவர் அரசனாயினும் ஆண்டியாயினும் பிணம் என்ற பெயரிட்டு அழைப்பார்கள். அந்த பிணத்தை சுடுகாட்டில் சுட்டுவிட்டு நீரில் குளித்து வீடு திரும்புவார்கள்.

நாமும் ஒருநாள் இப்படி இறக்க நேரிடும் என்ற நினைப்பே இல்லாமல் குளித்து வீடு திரும்புவார்கள். ஆனால் இந்நிலை வராமலிருக்க இளமை இருக்கும் போதே மகான் அகத்தீசர், மகான் நந்தீசர், மகான் திருமூலர் போன்ற, மரணத்தை வென்ற முற்றுப்பெற்ற ஞானிகள் திருவடியைப் பற்றி தினமும் பூஜித்தும், உயிர்க்கொலை தவிர்த்தும், புலால் மறுத்தும் முடிந்த அளவு அன்னதானம் செய்தும், புண்ணிய காரியங்கள் செய்து கொள்ளவேண்டும். ஞானிகள் ஆசியாலும், அருளாலும், புண்ணிய பலத்தாலும் மரணமில்லா பெருவாழ்வை பெறலாம்.

அருளும் அரசனும் ஆனையுந் தேரும்
பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னந்
தெருளும் உயிரொடுஞ் செல்வனைச் சேரின்
மருளும் பினையவன் மாதவ மன்றே.

– திருமந்திரம் – செல்வ நிலையாமை – கவிஎண் 168.

மனையாளும் மக்களும் வாழ்வுந் தனமுந்தன் வாயில்மட்டே
இனமான சுற்றம் மயான மட்டேவழிக் கேதுதுணை
தினையாம் அளவெள் ளளவா கினுமுன்பு செய்ததவந்
தனையாள என்றும் பரலோகஞ் சித்திக்கும் சத்தியமே.

– மகான் பட்டினத்தார் – பொது – கவிஎண் 12.

நிலையற்ற மனித வாழ்வில் மனிதன் இறந்த உடன் அவனுடைய அன்புடைய மனைவியும், அவனது குழந்தைகளும், பெருமிதமாய் வாழ்ந்த வாழ்வும், தன்னால் சேர்த்த பொருளும், தன் முன்னோர்களால் சேர்க்கப்பட்ட பொருளும் வாசலோடு நின்றுவிடும். அவனது உறவினர்களும், நண்பர்களும் சுடுகாடு மட்டும் வருவார்கள். ஆனால் அம்மனிதன் வாழும் காலத்து ஒரு நாளோ, ஒரு வாரமோ, ஒரு மாதமோ, ஒரு சில மாதங்களோ, வருடங்களோ முற்றுபெற்ற ஞானிகளின் நாமத்தை மகான் திருமூலதேவர், மகான் மாணிக்கவாசகர், மகான் பட்டினத்தார், மகான் திருஞானசம்மந்தர், மகான் அகத்தியர் போன்ற ஞானிகளின் நாமத்தை சொல்லி திருவடி பற்றி பூசித்திருந்தால் அவன் செய்த பூசையானது அவனது இறுதிவரை வந்து அவனை இறைவனடி சாரச்செய்யும்.

இங்கு தினையளவாம், எள்ளளவாம் என மகான் பட்டினத்தார் கூறுவதன் நோக்கம், மக்கள் உணரக்கூடிய வகையில் உள்ள மிகச்சிறிய தானியங்கள் எள்ளும், தினையுமாகும். அச்சிறிய அளவிலேனும் ஆசான்பால் பக்தி செலுத்தினாலே அது உன்னை காப்பாற்றும். அதோடு மட்டுமன்றி அவனது ஆன்மாவைப் பின்தொடர்ந்து பின் எடுக்கும் ஜென்மங்களிலும் தொடர்ந்து வரும். இது சத்தியம் என்கிறார் மகான் பட்டினத்தார்.

விரதத்தை மேற்கொண்டாலும், பக்தி அல்லது ஞானத்தை மேற்கொண்டாலும் உயிர்கொலை தவிர்த்தும் புலாலை மறுத்தும் இருந்தாலன்றி ஞானவாழ்வு கைகூடாது.



# பத்தாம் சூத்திரம்

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

– சிவஞானபோதம் – பத்தாம் நூற்பா.

சிவனே சிவஞானி யாதலாற் சுத்த
சிவனே எனஅடி சேரவல் லார்க்கு
நவமான தத்துவ நன்முத்தி நண்ணும்
பவமான தின்றிப் பரலோக மாமே.

– திருமந்திரம் – சிவகுரு தரிசனம் – கவிஎண் **1580.**

குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே.

– திருமந்திரம் – சிவகுரு தரிசனம் – கவிஎண் **1581.**

பல ஜென்மங்களில் உயிர்க்கொலை தவிர்த்தும், புலால் மறுத்தும், காலை மாலை சிவபூஜை செய்தும் வருகின்ற உலகிலுள்ள புண்ணியவான்களை ஆசான் ஞானபண்டிதராகிய மகான் சுப்ரமணியர் ஒரு நொடிப்பொழுதில் அறிந்து கொள்வார். அறிந்து கொண்டு அவன் சிந்தையில் தங்கி உடல் மாசையும், உயிர் மாசையும் அறியச் செய்வார். உடல் மாசிற்கு காரணம் மும்மலக் குற்றமாகும். உடல் மாசினால் உயிர் மாசுபடும். மாசு அறியாமையை உண்டு பண்ணும். மும்மலக் குற்றத்தாலான இத்தேகம் பாச தேகமாகும். பாச தேகம் நீங்கினால் எல்லாம் வல்ல இறைவனும் இவனும் ஒன்றாகி விடுவர். இதை ஆதி தலைவன் மகான் சுப்ரமணியர்தான் இப்பாச தேகத்தை நீக்கி தரமுடியும். சிருஷ்டி, திதி, சம்ஹாரம் (படைத்தல், காத்தல், அழித்தல்) இவை இறைவன் செயல்பாடாகும். ஆனால் மும்மலதேகமான பாசதேகத்தை நீக்கி ஒளி உடம்பை பெற்றவர்கள் படைத்தல், காத்தல், அழித்தல் என்ற முத்தொழில்களன்றி அருளல், மறைத்தல் என்ற இரண்டு தொழில்கள் அதிகமாக செய்யும் வல்லமை பெற்று ஐந்தொழில் செய்யும் வல்லமை பெற்றவர்களாவார்கள். இவ்வைந்தொழில் செய்யும் வல்லமை பெற்ற ஞானிகளே சிவனாகும், இறைவனாகும். இவர்களே காரணகுரு ஆவார்கள். காரண குருவாகிய ஆசான் மகான் ஞானப்பண்டிதனையும், மகான் அகத்தீசரையும், மகான் திருமூலதேவரையும், மகான் நந்தீசரையும், மகான் மாணிக்கவாசகரையும், மகான் திருஞானசம்பந்தரையும், மகான்

திருநாவுக்கரசரையும் குருவாக ஏற்று தினமும் இடைவிடாது சலிப்பில்லாமல் பூஜித்து வருபவர்களுக்கு இடகலையாகிய சந்திரகலையையும், பின்கலையாகிய சூரியகலையையும் சேர்த்து பதியாகிய சுழிமுனையில் செலுத்தச் செய்வார்கள் ஞானிகள். பதியாகிய சுழிமுனையில் ஒடுங்கிய காற்று மூலாதாரத்தில் தங்கி மூலக்கனலை எழும்பச் செய்து மும்மலமாகிய கசடை நீக்கச் செய்வார்கள். இவ்வாறு ஆசான் கருணையினால் தேகக்கசடு நீங்கப் பெற்றவர்களே பொன்னுடம்பை பெற்றவர்களாவார்கள். தேகக்கசடு அற்றவர்கள் எக்காலத்தும் அழிவில்லாத பெருவாழ்வு பெற்றவர்களாவார்கள். அதாவது மரணமில்லா பெருவாழ்வை பெற்றவர்களாவார்கள்.

புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமங் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே.

– திருமந்திரம் – பிராணாயாமம் – கவிஎண் 575.

உருத்தரித்த நாடியி லொடுங்குகின்ற வாயுவை
கருத்தினா லிருத்தியே கபாலமேற்ற வல்லீரே
விருத்தரும் பாலராவர் மேனியுஞ் சிவந்திடும்
அருட்டரித்த நாதர்பாத மம்மைபாத முண்மையே.

– மகான் சிவவாக்கியர் – யோகநிலை – கவிஎண் 5.

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டந்நிய மின்மையி னரன்கழல் செலுமே.

– சிவஞானபோதம் – எட்டாவது நூற்பா.

மகான் மெய்கண்ட தேவரே தனது சிவஞானபோதத்தில் எட்டாவது நூற்பாவில் "தம்முதல் குருவுமாய் தவத்தினில் உணர்த்தவிட்டு அந்நியம் இன்மையின் அரன் கழல் செலுமே" என கூறுவதால் ஆசானும் சீடனும் வேற்றுமை இல்லாது இரண்டற கலந்து விட்டால் அவன் இறைவனடி சேர்வான். அங்ஙனம் இறைவனடி சேர்ந்துவிட்டால் அவனும் இறைவனும் ஒன்றாகி விடுவார்கள். அவனும் இறைவனும் வேறல்ல. இவ்வாய்ப்பு குருஅருளால் பெற்ற பெரும் பேறாகும்.

தான்நான் எனும்பேதந் தன்னைத் தவிர்த்தான்நான்
ஆனான்சிற் றம்பலவன் அந்தோநான் – வானாடர்
செய்தற் கரியதவம் செய்தேன் மகிழ்கின்றேன்
எய்தற் கரியசுகம் ஏய்ந்து.

– திருஅருட்பா – ஆறாம்திருமுறை – சுத்த சிவநிலை – கவிஎண் 1498.

அன்பு சிவம்இரண் டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.

– திருமந்திரம் – அன்புடைமை – கவிஎண் 270.

உண்மை குருநாதர் அதாவது சற்குருவானவர் சிவமென கூறுவர். ஆதலினால் சற்குருவும் சிவனும் ஒன்றே யாவார். அச்சற்குரு சீடன்பால் கருணை கொண்டு சீடனுடன் இரண்டற கலப்பதனால் சீடனும் குருவும் ஒன்றாக கலந்து விடுகின்றனர். இருவரும் ஒன்றாக கலப்பதனால் சிவனும் அச்சீடன்பால் இரண்டற கலந்து விடுகிறான். ஆதலினால் சீடனும், குருவும், சிவமும் ஏகமாக அதாவது ஒன்றாக கலந்து ஏகனாக இருக்கின்றனர். இங்கு இறைவன் அநேகனாக அதாவது பற்பல உயிர்களாக பிரிந்திருந்த இறைவன் உண்மைப்பொருள் உணர்ந்த உடன், அநேகனாக இருந்த இறைவன் உண்மைப் பொருளுணர்ந்தவுடன் இரண்டற கலப்பதினால் ஏகனாக அதாவது அவன்வேறு தான்வேறு என்ற பாகுபாடின்றி ஒன்றாகி விடுவதால், ஏகனாக விளங்குகிறான். இந்நிலை பெற வேண்டுமென்றால் எல்லாம்வல்ல இறைவனின் பணியாகிய இறைபணி அதாவது அறப்பணிகளை சலிப்பில்லாது தொடர்ந்து செய்து வரவேண்டும். அவ்வாறு செய்துவந்து இறையருளும் குருஅருளும் பெற்றவர்கள் மலமாய்கை அற்றதோடு மட்டுமல்லாது முன் ஜென்மத்தில் செய்த வலிமை பொருந்திய தீவினைகளை வென்றவர்கள் ஆவார்கள். இவர்களே வினை நீங்கி நம்மை வஞ்சிக்கும் மும்மலதேகத்தை வென்று இறைவனும் தானும் ஒன்றாகும் வாய்ப்பை பெறுவார்கள். இந்நிலையே மகான் மெய்கண்ட தேவர், மகான் திருமூலர் போன்ற முதுபெரும் ஞானிகளை பூசிப்பவர்கள் பெறும் பேறாகும்.



# பதினோறாம் சூத்திரம்

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காணவுள் ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா வன்பி னரன்கழல் செலுமே.

– மகான் மெய்கண்ட தேவர் – சிவஞானபோதம் – பதினோறாம் நூற்பா.

நம்முடன் வாழும் தாய், தந்தை, சகோதரர்கள், சகோதரிகள், நண்பர்கள், உற்றார், உறவினர்கள் மற்றும் அநேக நபர்களையும் நமது கண்கள் பார்க்கின்றது. உலகிலுள்ள அநேக பொருள்களையும், இடங்களையும், ஜீவராசிகளையும் கண்களால் நாம் காண்கிறோம். இங்கு நாம் கண்களால் காட்சிகளை கண்டாலும் அவற்றின் வேறுபாடுகளை கண்கள் நமக்கு உணர்த்துவது இல்லை. நமது கண்களால் பார்க்கும் நபர்களை இவர் தாய் என்றோ, தந்தையென்றோ, நண்பனென்றோ, உற்றார், உறவினர் என்றோ, சகோதர சகோதரி என்றோ பிரித்து பார்க்க அதற்கு தெரியாது. அதுபோலவே உலகிலுள்ள பொருள்களின் காட்சியை கண்கள் காணுமே தவிர அதன் தன்மைகளை கண்களால் உணரமுடியாது. ஏனெனில் கண்கள் என்பது பொறியாகும். அதாவது செயல்படும் கருவியாகும். அந்த கண்களால் பார்க்கப்படும் காட்சிகளை இன்னதென்றும், இவர் இவரென்றும் பிரித்து அறிவது மனக்கண்களாகும். இங்கு காட்சிகளின் தன்மையை உணர்வது, அறியும் கருவியாகிய மனக்கண்ணேயாகும். அது போலவே செவி, வாய், மூக்கு, உடல் ஆகியன கேட்கவும், சுவைக்கவும், நுகரவும், ஸ்பரிசிக்கவும் செய்யுமே தவிர அவற்றின் வேறுபாடுகளையும் தன்மைகளையும் இன்னதென்று உணர்வது புலன்களான மனமே ஆகும். அதை உணர மனமும், அவை நிலையானதா நிலையற்றதா என்பதை பிரித்தறிந்து உணரமுடியாது.

மும்மலக் குற்றத்தை வென்றவரும் முற்றுபெற்றவரும் மரணமில்லா பெருவாழ்வை பெற்றவரும் நிலையில்லாதவற்றை உணர்ந்து நிலையானதை பற்றி கடைத்தேறியவருமான மகான் மெய்கண்ட தேவரை வணங்கினால், நம் பால் கருணை கொண்டு நம் மனதில் தங்கி நாம் காணும் பொருள்களின் நிலையாமையையும் நிலையான பொருள் எது என்பதையும் உணர்த்துவார். அவ்வாறு நிலையானதை அறியாவிடில் நிலையில்லாதவற்றை நிலையென்று மயங்கி அதன்பின் மனமானது சென்று இறுதியில் பிறவிக்கு காரணமாக அமைந்து விடும். ஆசான் உணர்த்தினாலன்றி நித்தியத்தையும் அநித்தியத்தையும் அறிய முடியாது. அங்ஙனம் ஆசான் நித்தியமான

இறைவனை உணர்த்திய பின், விடா தவமுயற்சியை மேற்கொண்டு இறைவனை அடைய வேண்டும். இதை உணர்த்தும் ஆசான் தானும், தலைவனும் இரண்டற கலந்து ஒன்றானவர்கள் ஆவார்கள். அத்தகு ஆசான் சற்குருவானவர். அச்சற்குருவின் திருவடியைப் பற்றினால், தான் அடைந்த அந்த பேரின்பநிலையை, தான் அடைந்த அந்த தலைவனும் தானும் ஒன்றான நிலையை தனது சீடனும் விரைந்து அடையச் செய்வார். இதை மெய்கண்ட தேவர் தமது சிவஞானபோதம் எட்டாவது நூற்பாவில்

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டந்நிய மின்மையி னரன்கழல் செலுமே.
– சிவஞானபோதம் – சாதனஇயல் – எட்டாவது நூற்பா.

என கூறுகிறார்.

ஆகவே பாசம் நீங்கிய, மும்மலக் குற்றமற்ற சற்குரு, மும்மலக் குற்றமுடைய, பாசவினைக்கு உட்பட்ட சீடன்பால் கருணை கொண்டு, அவனைச் சார்ந்து, உணர்த்தி, நெறிபடுத்தி அவனுடன் இரண்டற கலக்கும் போது பேரொளியை கண்ட இருள் விலகுவது போல சீடன்பால் உள்ள மும்மலகுற்றமும் பாசவினைகளும் நீங்கி அவனும் ஆசானைப் போலவே மாறி, இருவரும் இரண்டற கலந்து தான்வேறு அவர்வேறு என்று வேறுபாடில்லாது ஒன்றாகி விடுகிறார்கள்.

தலைவனும், ஆசானும், முதுபெரும் ஞானிகளும் ஒளிஉடம்பை பெற்றவர்கள். அவ்வொளி உடம்பை பெற்றவர்கள், இருள் தேகமாகிய மும்மலத்தாலான இத்தேகத்தினை சார்ந்தால் ஒளியைக்கண்ட இருள் விலகுவது போல ஒளி உடம்பான தலைவன் சார்ந்த இந்த மும்மலக்குற்றமுடைய தேகத்திலுள்ள இருளாகிய மும்மல தேகக்கசடு நீங்கி அத்தேகத்திலுள்ள ஒளிஉடம்பு தோன்றும்; தோன்றி இவனையும் தலைவனையும் ஒன்று போலாக்கி விடும்.

உள்ளத் தொருவனை உள்ளுறு சோதியை
உள்ளம்விட் டோரடி நீங்கா ஒருவனை
உள்ளமுந் தானும் உடனே இருக்கினும்
உள்ளம் அவனை உருவறி யாதே.
– திருமந்திரம் – திரோபவம்(மறைத்தல்) – கவி எண் 431.

இன்பப் பிறவி படைத்த இறைவனுந்
துன்பஞ்செய் பாசத் துயருள் அடைத்தனன்
என்பிற் கொளுவி இசைந்துறு தோற்றசை
முன்பிற் கொளுவி முடிகுவ தாக்குமே.
– திருமந்திரம் – திரோபவம்(மறைத்தல்) – கவி எண் 432.

காண்கின்ற கண்ணொளி காதல்செய் யீசனை
ஆண்பெண் அலியுரு வாய்நின்ற ஆதியை
ஊண்படு நாவுடை நெஞ்சம் உணர்ந்திட்டுச்
சேண்படு பொய்கைச் செயலணை யாரே.

– திருமந்திரம் – திரோபவம்(மறைத்தல்) – கவி எண் 434.

அறுசுவையை நாவானது உண்டாலும் அதன் சுவையின் தன்மையை மனம்தான் உணர்கிறது.

ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயம்இன்றே
மெய்உணர்வு இல்லா தவர்க்கு.

– திருக்குறள் – மெய் உணர்தல் – குறள் எண் 354.

எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

– திருக்குறள் – மெய் உணர்தல் – குறள் எண் 355.



# பன்னிரெண்டாம் சூத்திரம்

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
அம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானு மரனெனத் தொழுமே.

– சிவஞானபோதம் – பன்னிரெண்டாம் நூற்பா.

நோன்றாள் – தாங்கிக் கொள்ளும் திருவடி
கழீஇ – நீக்குதல்
மரீஇ – பொருந்துதல்
மலிந்தவர் – அன்பு மிகுந்தவர்
மால்அற – மயக்கமற்ற

செம்மலர் நோன்றாள் சேரல் ஒட்டா–எல்லாம் வல்ல இறைவனது திருவடிகள் மலர் போன்று மென்மையானதாகும். ஆயினும் அத்திருவடியை நாம் சென்றடைய முடியாது. அத்திருவடியை நாம் அடைய வேண்டுமெனில், அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ–யாரொருவர் மும்மலத்தை வென்றார்களோ அத்தகு குருநாதனோடு அன்பு கொண்டு சார்ந்திருக்க வேண்டும். மால்அற நேயம் மலிந்தவர்–அவர் மயக்கமற்று அதாவது மயக்கங்களாகிய மாயை முழுதுமாக நீங்கப் பெற்றவராகவும், அன்பு மிகுந்தவராகவும் இருப்பார். வேடமும் ஆலயம்–அத்தகு தன்மையுடைய தவசிகளின் தவவேடமாகிய காவி உடைதரித்த அந்த தோற்றத்தை ஆலயமாகவும், தானும் அரன் என தொழுமே – அத்தவசியினையே அக்குருநாதரையே இறைவனாகவும் எண்ணி வணங்கி தொழுதால் அவர் அவ்வன்பர்பால் கருணை கொண்டு சேரமுடியாத இறைவன் திருவடியை சேரும் உபாயம் சொல்வார்.

இக்கவியில் மகான் மெய்கண்ட தேவர் நோன்றாள் எனக் குறிப்பிடுகிறார். இறைவன் திருவடியின் தன்மை எங்ஙனம் உள்ளதெனில் அடியார்கள் அறிந்தும் அறியாமலும் தவறு செய்தாலும் அதை பொறுத்துக் கொள்ளும் திருவடியாகும். இதையே நோன்றாள் என்கிறார். அம்மலம் கழீஇ என்பது மும்மலக் குற்றத்தை நீக்குவதாகும்.

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன் மயூரமுமே.

– கந்தரலங்காரம் – கவி எண் 70.

ஆசான் ஞானபண்டிதன் திருவடிகள் மிக மென்மையான மலர் போன்ற திருவடிகளாகும். அத்தகு உயர்ந்த திருவடிகளினை சிரம் வைத்து வணங்கினால்

மும்மலக் குற்றங்கள் நீங்கி மயக்கமாகிய மாயையும் நீங்கி, உண்மைப் பொருளை அறியக்கூடிய சிறப்பறிவும் உண்டாகும். உண்மைப் பொருளறிந்தவர்கள் சொற்கள், அத்தனையும் அடியவர்களது பிறவிப்பிணிக்கு மருந்தாக அமையும். அதுமட்டுமல்லாது நாம் முன் ஜென்மங்களில் செய்த பாவங்களால் ஏற்பட்ட பழியை நீக்கக்கூடிய வல்லமை பொருந்தியதாகும்.

அம்மென்மலர் திருவடிகள் மேலும் தன்பால் அன்புள்ளவர்கள் தனியே பயணம் மேற்கொள்ளும் போது துஷ்ட ஜந்துக்களாலும், விஷ ஜந்துக்களாலும், கள்வர்களாலும், பகைவர்களாலும் இடையூறு வராமல் காப்பாற்றும் திருவடிகளாகும். ஆசான் ஞானபண்டிதனை வணங்கி திருவடியை பற்றுகிறவர்களுக்கு முன்செய்த வினைகள் நீங்குவதோடு, அவர் மேற்கொள்கின்ற காரியங்கள் வெற்றி பெறும். மரணமில்லா பெருவாழ்வும் கைகூடும். ஆசான் ஞானபண்டிதனும் இறைவனும் வேறுவேறு அல்ல. இறைவனும் ஞானபண்டிதனும் ஒருவனே. ஞானபண்டிதன் திருவடியே அன்பர் செய்யும், குற்றம் குறைகளை பொறுத்துக் கொண்டு அருள் செய்யும் திருவடியாகும். அம்மென்மையான திருவடியை வணங்கி பெறுதற்கரிய பெரும் பேறான இறைவன் திருவடியை அடைய வேண்டும்.

பேற்றைத் தவஞ்சற்றுமில்லாத வென்னைப்ர பஞ்சமென்னும்
சேற்றைக் கழிய வழிவிட்ட வா!செஞ்சடாடவிமேல்
ஆற்றைப் பணியை யிதழியைத் தும்பையை யம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன்க்ரு பாகரனே.

– கந்தரலங்காரம் – கவி எண் 1.

பெருமைக்குரிய தவம் சிறிதும் இல்லாத என்னை பஞ்சபூதத்தாலான இவ்வுடம்பிலுள்ள மும்மலக்குற்றமாகிய பிரபஞ்ச சேற்றை வெல்ல அதாவது மும்மலக் குற்றத்தை முற்றிலுமாக நீக்குமாறு அருள் செய்தவன் அம்முருகப் பெருமான் என அருணகிரிநாதர் கூறுகிறார். அத்தகு முருகப் பெருமானது திருவடித் துணையின்றி பிரபஞ்ச சேறாகிய மும்மலக் குற்றத்தை நீக்க முடியாது.

கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

– திருக்குறள் – கடவுள் வாழ்த்து – குறள் எண் 2.

கொல் – அசைநிலை

எவனொருவன் மும்மலக் குற்றத்தை வென்றானோ அவனது திருவடியே நற்றாள் எனப்படும். அதாவது நல்ல திருவடியாகும். அத்தகு திருவடியை வணங்குவதே கற்றதன் பயன். எவ்வளவுதான் கற்றாலும் அந்நற்திருவடியை வணங்கா விட்டால் அவனது, கற்ற கல்வியினால் பயனில்லை.

அந்த நற்றாள், நல்ல திருவடி நாம் முன்செய்த பாவங்களை நீக்குவதோடு புண்ணியத்தையும் பெருகச் செய்யும். அத்திருவடி எதை கற்க வேண்டுமோ

அதைக் கற்க வைக்கும் திருவடியாகும். கற்க வேண்டியவற்றை கற்கச் செய்து கற்ற வழியில் நின்று நடக்கவும் செய்ய வைக்கும் திருவடியாகும்.

அத்திருவடியே நமக்கு அறியாமையை உண்டு பண்ணும் மும்மலக் குற்றத்தை நீக்கும் திருவடியாகும். அத்திருவடியே லோபித்தனத்தை நீக்கி ஏழை எளியவர்பால் இரக்கம் கொண்டு அவர்களுக்கு பசியாற்றும், எண்ணத்தை தோற்றுவித்து அவர்களுக்கு பசியாற்ற வேண்டுமென்ற ஜீவகாருண்ய அறிவையும், அதற்குரிய பொருளையும் தந்து பசியாற்றுவிக்க செய்து நம்மை புண்ணியவானாக ஆக்கவும் செய்யும், அத்திருவடியே அவனை புண்ணியவானாக ஆக்குவதோடு மட்டுமல்லாது அப்புண்ணியவானின் வாசியோடு வாசியாக கலந்து இடகலையையும், பின்கலையையும் பதியாகிய சுழிமுனையில் ஒடுங்கச் செய்து மூலக்கனலை தோற்றுவித்து சத்தும் அசத்துமாக உள்ள இத்தேகத்தில் உள்ள அசத்தாகிய அசுத்த சுக்கிலத்தை நீத்து போகச் செய்து சத்தாகிய சுத்த சுக்கிலத்தை நிலைபெறச் செய்யும் வல்லமை உடையதாகும்.

அத்திருவடியே இவ்விதமான தவ முயற்சியின்போது அப்புண்ணியவானுக்கு அதாவது தவசிக்கு பகைவர்களாலும், மற்ற எந்தவிதத்திலும் இடையூறு ஏற்படாமல் காத்து தாங்கி நின்று இரட்சிக்கும். அத்திருவடியே அத்தவசிக்கு தவத்திற்குரிய இடமும், தவத்திற்குரிய பொருளுதவியும், தவத்திற்கு உதவி செய்யக்கூடிய நல்ல பண்புள்ள உண்மைத் தொண்டர் கூட்டத்தையும் கொண்டு வந்து சேர்த்து தவம் முடிக்க உதவி செய்யும்.

இடுதலைச் சற்றுங் கருதேனைப் போதமிலேனையன்பாற்
கெடுதலி லாத் தொண்டரிற்கூட் டியவா கிரெளஞ்சவெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன் பிறவி யறவிச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினைவிலங்கே.

– கந்தரலங்காரம் – கவி எண் 100.

பிறருக்கு கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் சற்றும் இல்லாதவனும் ஞானத்திற்குரிய அறிவு சிறிதும் இல்லாதவனுமாகிய என்னையும் ஒரு பொருட்டாக மதித்து, உனது திருவடியை வணங்கிய ஒரே காரணத்திற்காக சற்றும் கெடுதலில்லாத அன்பு பொருந்திய தொண்டர்கள் கூட்டத்தில் என்னையும் ஒருவனாக சேர்த்துக் கொண்டவரே முருகா என அருணகிரிநாதர் கூறுகிறார்.

எத்தகைய அறிவும் ஆற்றலும் இல்லையென்றாலும், ஆசான் ஞானப்பண்டிதன் திருவடியே கதியென்று வணங்கினால் பெறுதற்கரிய பெரும் பேற்றை தரும் வல்லமை பொருந்தியதாகும் முருகனின் திருவடிகள். அத்திருவடியைத் தாங்கிய முருகப்பெருமான் தனது தொண்டர்களுக்கு ஏற்படும் இடையூற்றினை கிரெளஞ்ச மலையைப் பிளந்து அகத்தியருக்கு வழி ஏற்படுத்திக் கொடுத்தது போல அவர்தம் இடையூறை நீக்கி தருவார். மேலும் மும்மலக் குற்றமாகிய சிறையில் அகப்பட்ட ஆன்மாவை விடுவிக்கும் ஞானத்திருவடியே சர்வ

வல்லமை பொருந்திய ஆசான் ஞானபண்டிதனின் திருவடிகளாகும்.

அருமறை ஆகமம்அங்கம் அருங்கலைநூல் தெரிந்த
அகத்தியனுக்கு ஒத்துஉரைக்கும் அருட்குருவாம் குருளை
திருமறை மாமுனிவர்முனி தேவர்கள்தம் தேவன்
சிவன் அருள்சேர் திருமதலை தவநிலையோர் தெய்வம்
பொரும்அறையார் கழல்வீரர் வீரன் கையில்
பூநீர் கொண்டு ஓவாது போற்றும் அடியார்கள்
கருமறையா வகைஅருளிக் கதிவழங்கும் கந்தன்
கழல்இணைகள் எம்சிரத்தில் கருத்தில் வைப்பாம்.

– சிவஞானசித்தியார் – முருகப் பெருமான் வணக்கம் – கவி எண் 5.

மகான் மெய்கண்ட தேவர் முழுமுதற் கடவுளும் ஞானத் தலைவனுமாகிய முருகப் பெருமானை மனமுருகி பூஜித்ததால் மகான் மெய்கண்ட தேவரை முருகப்பெருமான் சார்ந்து உண்மையும் பொய்யும் இத்தேகத்தில் கலந்துள்ளது என்பதை உணர்த்தினார். உண்மையையும், பொய்யையும் உணர்ந்து பொய்யை நீக்கி உண்மையை நிலைநிறுத்தி வெற்றி கண்டார் மகான் மெய்கண்டதேவர். மெய்யைக் கண்டு மெய்யை வெற்றி கொண்டதால் அவர் மெய்கண்ட தேவர் என அழைக்கப்பெறுகிறார். அவரால் இயற்றப்பட்டதுதான் சிவஞானபோதம். மகான் மெய்கண்ட தேவரின் வழி வந்தவர்தான் மகான் அருள் நந்தி சிவாச்சாரியார். இவர் எழுதிய சிவஞான சித்தியார் என்ற நூலில் 'முருகப்பெருமான் வணக்கம்' என்ற தலைப்பின் கீழ் இப்பாடல் இயற்றப்பட்டுள்ளது. இந்நூல் சிவஞான போதத்தின் வழி நூலாகும்.

வேதாந்தம், சித்தாந்தம், கலாந்தம், போதாந்தம், நாதாந்தம், யோகாந்தம் ஆகிய அனைத்தையும் அறிந்தவர்தான் மகான் அகத்தியர். ஆயினும் குரு என்ற ஒருவர் இருந்தால்தான் ஞானத்தை அடையமுடியும். அகத்தியருக்கு குருவாக இருந்தவர் மகான் சுப்ரமணியர் ஆவார். அவரே சிவபெருமானின் இளைய மகனும், முருகப் பெருமானும் ஆவார். அகத்தியருக்கு குருநாதராக எல்லாம் வல்ல முழுமுதற்கடவுளும் ஞானபண்டிதனுமாகிய முருகப்பெருமானே இருந்து அவரது உடலை சார்ந்து உடம்பைப் பற்றியும், அதன் சூட்சுமங்களையும் உணர்த்தி அவரை மரணமில்லா பெருவாழ்வை அடையச் செய்து அவரது தேகத்தை ஆயிரம் கோடி சூரியப் பிரகாசமுள்ள ஜோதி உடம்பாக அதாவது ஒளி உடம்பாக மாற்றித் தந்தார்.

அகத்தியரும் முருகப்பெருமானின் முதற் சீடனாக இருந்து எங்கெல்லாம் முருகப்பெருமானை வணங்குகிறார்களோ அங்கெல்லாம் இவரே அருள் செய்யலானார். அகத்தியர் நாடுதோறும் சென்று ஒன்பது கோடி ஞானிகளை உருவாக்கினார். சித்தர்கோன், சித்தர்க்கெல்லாம் தலைவர், குருமுனிவர் என்று அநேகச் சிறப்பு பெயர்களால் அழைக்கப் பெறும் அகத்தியர் பல்வேறு வேதாகமங்களையும் அருமறைகளையும் பல கலைகளையும் கற்று

தேர்ந்திருந்தாலும் அவருக்கு குருவாய் இருந்து ஞான இரகசியத்தை உணர்த்தி கடைத்தேற்றியவர் முருகப் பெருமானே ஆவார்.

அத்தகு முருகப் பெருமானையே அகத்தியரும் அவர் வழிவந்த எல்லா ஞானிகளும் முழுமுதற் கடவுளாக வணங்கி அப்பேராற்றல் கொண்ட தலைவன் ஆசியினால் தான் ஞானிகளாய் ஆனார்கள். அவ்வழியில் வந்தவர்தான் மகான் மெய்கண்ட தேவரும், மகான் அருள்நந்தி சிவாச்சாரியாரும் ஆவார்.

ஞானத்துறையில் வெற்றி பெறும் பொருட்டு பல மகான்களை வணங்கி பூசித்தாலும், ஞானப்பண்டிதனாகிய முருகப் பெருமானின் திருஅருள் கடாட்சம் இல்லாமல், அவர் கருணை இல்லாமல், அவர் ஆசி இல்லாமல் இத்துறையில் வெற்றி பெற இயலாது. ஏனெனில் நவகோடி சித்தர்களும் தலைவனாகிய ஞானபண்டிதன் ஆசியால்தான் மரணமில்லா பெருவாழ்வை பெற்றார்கள்; பெற்று தலைவனுடன் இரண்டற கலந்தார்கள்.

எனவே இத்துறையில் வருபவர்கள் முதலில் ஞானபண்டிதனின் ஆசி பெற வேண்டும். அத்தகு ஆற்றல்பெற்ற ஞானபண்டிதனை வணங்கி ஆசி பெறும் அன்பர்கள் அடையும் பலனாக மகான் அருள்நந்தி சிவாச்சாரியார் இக்கவியின் இறுதியில் "கருமறையா வகைஅருளிக் கதிவழங்கும் கந்தன்" என குறிப்பிடுகிறார்.

ஆசான் ஞானபண்டிதன் ஆசியினால் இவ்வுடம்பின் இரகசியத்தை அறிந்து அதிலுள்ள பொய்யையும் மெய்யையும் அறிந்து இத்தேகத்தின்கண் தலைவன் ஆசியால் தோன்றும் மூலக்கனலின் உதவியால் பொய்யாகிய அசுத்த சுக்கிலத்தை நீர்த்து போகச்செய்து மெய்யாகிய சுத்த சுக்கிலத்தை நிலைநிறுத்தி படிப்படியாக முன்னேறி இறுதியில் தலைவனின் ஆசியாலும் அருளாலும் மரணமில்லா பெருவாழ்வை பெறுவார்கள் என்பதையே குறிப்பிடுகிறார்.

எல்லா ஞானிகளையும் உருவாக்கியவரும் அகத்தியருக்கும் குருவானவரும், மகான் மெய்கண்ட தேவருக்கும், மகான் அருள்நந்தி சிவாச்சாரியாருக்கும் குருவானவரும் ஞானத்தின் தலைவனுமான மகான் சுப்ரமணியரை, முருகப்பெருமானை அவர்தம் திருவடிகளை நம் சிரத்தின் மீதும் நமது சிந்தையிலும் வைத்து பூசித்து பெறுதற்கரிய பெருவாழ்வை பெற வேண்டும் என மகான் அருள்நந்தி சிவாச்சாரியார் கூறுகிறார்.

ஆசான் ஞானபண்டிதனின் முதற் சீடராம் சித்தர்கோன், ஆசான் அகத்தீசரும், அவர் வழி வந்தவர்களான மகான் நந்தீசர், மகான் திருமூலர், மகான் மெய்கண்டதேவர், மகான் கருவூர்தேவர், மகான் அருள்நந்தி சிவாச்சாரியார், இராமலிங்க சுவாமிகள் வரை உள்ள ஒன்பது கோடி ஞானிகளும் ஆசான் ஞானபண்டிதன் ஆசியால்தான் ஞானியாகி, அப்பெருமைமிகு தலைவனுடன் இரண்டற கலந்துள்ளனர். தான் வேறு தலைவன் வேறு என்றில்லாமல் இருப்பதால் அகத்தியர் முதல்

வள்ளல்பெருமானார் வரை நவகோடி சித்தர்களில் யாரை வணங்கினாலும் அவர்கள் ஞானபண்டிதனை வணங்குவதாகவே கொள்ளலாம். இருப்பினும் இவர்களுக்கெல்லாம் தலைவனும் எல்லா ஞானிகளை தோற்றுவித்தவரும் ஈடு இணையில்லாதவரும் ஞானத்தின் தலைவனும் ஆகிய ஞானபண்டிதனை முருகப்பெருமானை முதற்கடவுளாக எண்ணி வணங்குவது சாலச்சிறந்ததாகும். குருபரனாகிய முருகப்பெருமானுக்கு நிகர் முருகனேயாகும்.

இறைவன் திருவடி மிக மென்மையானதுதான் என்றாலும் அத்தகு திருவடியை, தன் முயற்சியினாலோ, கற்பதினாலோ திருவடியை பற்றவோ, அடையவோ முடியாது. ஆசான் ஞானபண்டிதன் முதல் மகான் அகத்தியர், மகான் நந்தீசர், மகான் திருமூலதேவர், மகான் கருவூர்தேவர், மகான் மெய்கண்ட தேவர் போன்ற முற்று பெற்ற ஞானிகளை இறைவனாகவே எண்ணி வணங்கி ஆசி பெற்றால்தான் அவர்தம் வழிகாட்டுதலினாலும் அவர்கள் நம் உடம்பை சார்ந்தும், வழிநடத்தியும் சேரமுடியாத அத்திருவடிகளிடம் நம்மை சேர்ப்பார்கள்.

சித்தர் சிவலோகம் இங்கே தரிசித்தோர்
சத்தமுஞ் சத்த முடிவுந்தம் முள்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர்தம் முத்தி முதல்முப்பத் தாறே.

– திருமந்திரம் – உபதேசம் – கவி எண் 125.

எல்லாம் வல்ல ஆசான் ஞானபண்டிதன் திருவடி மிக மென்மையானதும், அன்பர்கள் செய்யும் குற்றங்களை பொறுத்துக் கொண்டும் அவர்களுக்கு அருள் செய்யும் திருவடிகளாகும். ஆயினும் அவுணர்கள் எனப்படும் அசுரர்களுக்கு மிக பயங்கரமானதாகும். அவர்களை பொடிப்பொடியாக்கி அழிக்க வல்லதுமாகும். அத்தகு மேன்மை பொருந்திய திருவடியை தொடர்ந்து யார் பூசிக்கிறார்களோ அவர்கள் பல நன்மைகள் அடைவார்கள்.

இவ்வாறு அவர்கள் பல்லாயிரக்கணக்கான ஜென்மங்களில் செய்த புண்ணியத்தாலும், ஆசான் ஞானபண்டிதன் திருவடியைப் பற்றி பூசித்ததாலும் ஆசான் ஞானபண்டிதனே அவர்களது வாசியோடு வாசியாக (மூச்சுக்காற்றோடு) கலந்து இந்த மும்மலத்தாலான குற்றமுள்ள தேகத்தை சார்ந்து அவரே இடகலையாகவும், வலதுகலையாகவும் இயங்கி இடகலையாகிய சந்திரகலையையும், வலதுகலையாகிய சூரியகலையையும் ஒன்று சேர்த்து புருவமத்தியாகிய சுழிமுனையில் (பதி) ஒடுங்கச் செய்வார்.

அவ்வாறு ஒடுங்கிய காற்று நம் தேகத்தின்கண் மூலக்கனலை தோற்றுவிக்கும். மூலக்கனலின் உதவியால் ஆசான் ஞானபண்டிதனே நம் உடம்பிலுள்ள தேகக்கசடை நீங்கச் செய்வார். தேகக்கசடு நீங்கியதும் மேலும்மேலும் மூலக்கனல் ஓங்கி முதுகு தண்டில் (வினாத்தண்டு) உள்ள

பிரம்மநாடி எனப்படும் மயிரிழைப் போன்ற நரம்பின் வழியாக மேற்சென்று புருவமத்தியாகிய (பதி) சுழிமுனைக் கதவை திறக்கும். அங்கே சுமார் பத்து அடி விட்டமுள்ள ஒரு பெரிய இரத்தினக்கல் போன்ற அமைப்பில் (சிகப்பு) உள்ள ஒரு வடிவத்தினுள்ளே மரகதக்கல் ஜொலிப்பது போன்ற பிரகாசமான பச்சைநிற ஒளி ஒன்று தோன்றும்.

மேலும் அந்த அரங்கினுள்ளேயே சூரிய ஜோதியும், சந்திர ஒளியும், கனல் போன்ற ஒளியும் மாறிமாறி முச்சுடர்களாக தோன்றி சொல்லொண்ணா பேரானந்தம் தரும். அதுமட்டுமன்றி நவரத்தின ஒளிகளும் மிகப் பிரகாசமாக தோன்றும். இதுவே சிவலோகம் எனப்படும். இச்சிவலோகம் என்பது வேறெங்கும் தனியாக இல்லை. நமது உடம்பிலுள்ள புருவமத்தியில் தான் உள்ளது. இதையே “சித்தர் சிவலோகம் இங்கே தரிசித்தோர்” என கூறுகிறார்.

இவ்வாறு மூலக்கனல் தோன்றி யோகநெறியில் பயிற்சி மேற்கொள்ளும் காலத்து, முதலில் ‘ஓங்காரம்’ என்ற ஒலி தோன்றி, அதுவே படிப்படியாக அதிகமாகி ரீங்காரமாக தோன்றும். மேலும் சில ஆண்டுகள் சென்றபின் அதுவே தசநாதமாக மாறி இறுதியில் புருவமத்தியாகிய சுழிமுனையில் ஒடுங்கும். இவ்வாய்ப்பும் ஞானபண்டிதன் திருவடியை பூசிப்பவர்களுக்கு மட்டுமே கிடைக்கும்.

“சத்தமுஞ் சத்த முடிவும் தம்முள் கொண்டோர்” அவ்விதம் ஜோதி கண்டவர்களும் தசநாதம் ஒடுங்கப் பெற்றவர்களுமான சித்தர்கள் நித்தர் எனப்படும், என்றும் அழியாத நிலை எய்தியவர்கள். அவர்கள் நிமலர் எனப்படும், மலக்குற்றமற்றவர்கள், நிராமயர் எனப்படும் எங்கும் வியாபித்த நிலையில் உள்ளவர்கள், நீள்பர எனப்படும் பாதாள லோகம் (கீழ் லோகம்) முதல் எல்லா அண்டங்களையும் கடந்து மிகப் பிரம்மாண்டமான பல்லாயிரங்கோடி அண்டங்கள் அளவு மிகவிரிந்து இருப்பார்கள். அவர்கள் தமது உடம்பிலுள்ள சுக்கிலத்தை, மூலக்கனல் உதவியால் அதிலுள்ள அசுத்தங்களை நீக்கி சுத்த சுக்கிலமாக மாற்றி நீர்த்து போகக்கூடிய அச்சுக்கிலத்தை மணியாக்கி வெற்றி கண்டவர்கள். அவர்களே முத்தர் அதாவது வெற்றி கண்டவர்களாவார்கள்.

இத்தகு நிலை அடைந்தவர்களுக்கு நமது தேகத்தின்கண் உள்ள தத்துவங்கள் தொன்னூற்றாறில் முக்கியமான முப்பத்தாறு தத்துவங்கள்தான் உதவியாக உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இத்தகு மிக உன்னதமான நிலையை அடைய ஆசான் ஞானபண்டிதன் திருவடிகளை வணங்க வேண்டும்.

மகான் மெய்கண்ட தேவரும் இந்நூற்பாவில் “செம்மலர் நோன்றாள்” எனும் அவ்வற்புத மலரினும் மெல்லிய வலிமை பொருந்திய திருவடி எனக் குறிப்பிடுவது, ஆசான் ஞானபண்டிதன் திருவடிகளையேயாகும். அத்தகு திருவடிகளே மேற்கண்ட அனைத்தையும் தரவல்லதாகும்.

திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகஞ்சிந் திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே.

– திருமந்திரம் – உபதேசம் – கவி எண் 138.

"செம்மலர் நோன்றாள்" என மெய்கண்ட தேவர் குறிப்பிடும் செம்மையான மென்மையான இறைவனது திருவடியை அடைய வேண்டுமென்றால், எல்லாம்வல்ல முழுமுதற் கடவுளாம் ஆசான் ஞானபண்டிதன் திருவடித் துணையில்லாமல் முடியாது. மேற்கண்ட கவியில் திருமூலர் கூறுவதை ஆராய்ந்து பார்த்தால் ஆசான் ஞானபண்டிதன் திருவடியே நம்மை இறைவனாக்குவிக்கும் என்பது புரியும்.

"திருவடியே சிவமாவது தேரில்" என்ற வரியில் இதை கூறுகிறார் திருமூலர். "திருவடியே சிவலோகம் சிந்திக்கில்" ஆராய்ந்து சிந்தித்தால் பெருமை வாய்ந்த ஆசான் ஞானபண்டிதனின் திருவடியின் துணையினால், இகலோகத்தில் இருந்து கொண்டே பரலோகமாகிய மோட்சலாபத்தை அடைய முடியும் என்பதையும் "திருவடியே செல்கதியது செப்பில்" பெருமை வாய்ந்த ஆசான் ஞானபண்டிதன் திருவடியின் துணையினால்தான், மேற்கதி எனப்படும் ஞானவாழ்வும், அதன் பயனாய் வீடு பேற்றையும் அடைய முடியும்.

"திருவடியே தஞ்சம் உள்தெளி வார்க்கே" இவற்றையெல்லாம் உணர்ந்து ஆசான் ஞானபண்டிதன் திருவடியே உண்மை திருவடி என்பதையும் அவரே ஞானத்தின் தலைவன் என்பதையும் அறிந்து தெளிந்து அம்மேன்மை பொருந்திய திருவடியைப்பற்றி தவம் மேற்கொள்பவர்களுக்கு தவக்காலத்தில் ஏற்படும் இடையூறுகளை களைந்து அஞ்சேல்! என தஞ்சம் அளிக்கும் அற்புதமான திருவடியாக தலைவன் திருவடி துணை செய்யும்.

திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந்
திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந்
திருவடி ஞானஞ் சிறைமல மீட்குந்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே.

– திருமந்திரம் – திருவடிப்பேறு – கவி எண் 1598.

ஞானம் எனப்படுவது ஆசான் ஞானபண்டிதனாகிய மகான் சுப்ரமணியரை அறிந்து கொள்வதும், அவர்தான் ஞானத்தின் தலைவன் என்பதையும் அறிந்து உணர்வதும், அவரது திருவடியே ஞானத்திருவடி என்பதை உணர்ந்து அவரது திருவடியைப் பற்றுவதும் ஆகும். அத்தகு பெருமை வாய்ந்த ஞானத்தலைவன் ஆசான் ஞானபண்டிதன் திருவடியைப்பற்றி, அவர் அருளால் அவரது திருவடியைத் தொடர்ந்து பற்றினால் அத்திருவடியானது நம்மை சிவமாக்குவிக்கும். அத்திருவடியின் தன்மையை உணர்ந்து திருவடியை பற்றி, அத்திருவடியே நம்மை சிவலோகமாகிய புருவமத்தியாகிய சுழிமுனையில் கொண்டு சேர்க்கும்.

அத்திருவடி ஞானமே நமது மும்மலத்தாலான தேகத்தில் எண்ணிலா பிறவிகள்தோறும் மீளமுடியாமல் சிறைபட்டு கிடக்கும் ஆன்மாவை மும்மலச் சிறையிலிருந்து விடுவித்து நற்கதி அடையச் செய்யும். அத்திருவடியே தவம் மேற்கொள்ளும் காலத்து சித்திகளையும், இறுதியில் முத்தியையும் தந்து வீடுபேறு அடையவும் செய்யும்.

மகான் மெய்கண்ட தேவர் பெருமைவாய்ந்த ஆசான் ஞானபண்டிதன் திருவடியைப் பற்றி ஞானத்தலைவன் திருவடித் துணையினால் பெறுதற்கரிய ஒளி உடம்பை பெற்று தலைவன் வேறு, தான் வேறு என்று பிரித்தறிய முடியாதவாறு இரண்டற தலைவனுடன் கலந்தவராவார். அவரும் தலைவனும் ஒன்றேயாகும். மென்மையானதும் செம்மையானதுமான இறைவன் திருவடியைப் பற்றிட அத்திருவடியின் துணைகொண்டே தவமுயற்சியை மேற்கொண்டு முற்று பெற்றவரும், மும்மலக் குற்றம் நீங்கியவர்களுமாகிய ஞானிகள் திருவடியை பூசித்து அவர்களையே இறைவனாக எண்ணி வணங்கி பூஜித்தால் பெறுதற்கரிய ஆசான் ஞானபண்டிதன் திருவடியைப் பற்றலாம். ஆசான் ஞானபண்டிதனே நமக்கு ஞானத்தை அளிப்பவர்.

அவர் கருணையினால் ஞானம் பெற்று வீடுபேறு அடையலாம். எனவே உண்மை குருநாதரின் தவவேடத்தையே ஆலயமாகவும், அந்த ஆலயத்தில் வீற்றிருக்கும் இறைவனாக, அக்குருநாதரை எண்ணி அதாவது உண்மை குருநாதரையே இறைவனாக எண்ணி வணங்கிவர, யாருக்கும் எட்டாத இறைவனது திருவடியானது, இறைவனின் திருவடிப்பேறானது நமக்கும் கிடைக்கும் என்பதையே மகான் மெய்கண்ட தேவர், தமது சிவஞானபோதம் பன்னிரெண்டாம் நூற்பாவில் குறிப்பிடுகிறார்.

வேதாக மசித்ர வேலா யுதன்வெட்சி பூத்த தண்டைப்
பாதார விந்த மரணாக அல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே யொளித்துச் சும்மாவிருக்கப்
போதாயினிமன மேதெரி யாதொரு பூதர்க்குமே.

– கந்தரலங்காரம் – கவி எண் 17.

நன்றாய் ஞானங் கடந்துபோய்
நல்லிந்திரியம் எல்லாம்ஈர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும்பாழ்
உலப்பில் அதனை உணர்ந்துணர்ந்து
சென்றாங் கின்பத் துன்பங்கள்
செற்றுக் களைந்து பசை அற்றால்
அன்றே அப்போதே வீடும்
அதுவே வீடு வீடாமே.

– திருவாய்மொழி 78–6.

ஒளியில் விளைந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்தொ ராநந்தத் தேனை யநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வாமுக மாறுடைத் தேசிகனே.

– கந்தரலங்காரம் – கவி எண் 8.

தேனென்று பாகென் றுவமிக் கொணாமொழித் தெய்வவள்ளி
கோனன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு கூறவன்றோ
வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரி யன்று சரீரியன்றே.

– கந்தரலங்காரம் – கவி எண் 9.

அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யாரறி வாரே.

– திருமந்திரம் – பதிவலியில் வீரட்டம் எட்டு – கவி எண் 343.

மகான் மெய்கண்ட தேவர் அருளிய சிவஞான போதத்தின் பன்னிரெண்டு சூத்திரங்களின் மொத்த சாராம்சமானது மேற்கண்ட ஐந்து பாடல்களில் அடங்கியுள்ளது. இவ்வைந்து பாடல்களையும் ஒருவர் புரிந்து கொண்டால் சிவஞான போதத்தையும் புரிந்து கொள்ளலாம். மேற்கண்ட பாடல்களின் உண்மைப் பொருளை யாரொருவர் அறிந்து உணர்கின்றார்களோ அவர்களால் மட்டுமே சிவஞான போதத்தையும் அதன் உட்பொருள் இரகசியத்தையும் அறிந்து உணர முடியும்.

இந்நூலில் மகான் மெய்கண்டதேவர் அவர்களால் மறைபொருளாக சொல்லப்பட்ட கருத்துக்களை மறைபொருளாகவும், வெளிப்படையாக சொல்லிய கருத்துக்களுக்கு வெளிப்படையாகவும் விளக்கம் சொல்லியுள்ளோம்.

பிழை இருப்பின் பெரியோர்கள் பொறுத்தருள வேண்டுமென்று பணிவோடு கேட்டுக் கொள்கிறேன்.

போற்றுவோம் ஞானிகள் திருவடியை! பெறுவோம் பேரின்ப வாழ்வை!!





சிவராஜயோகி, பரமானந்த சதாசிவ சற்குரு.

**ரெங்கராஜ தேசிக சுவாமிகள்**